# கல்கி

KALKI 7.1.2001
ரூ. 5.00



தி.மு.கவில்
திக்...திக்...!

## வென்றது இளமை!

# நில், கவனி, வெற்றிகொள்!



## கல்கி - ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்

இணைந்து வழங்கும்

# இளைஞர் திருவிழா!

அன்புள்ள வாசகர்களே!

கடிகாரத்தைக் காட்டிலும் வேகமாக ஓடிக் கொண்டிருக்கிறது நம் வாழ்க்கை. ஆனால், சரியான திசையில் ஓடுகிறோமா? குறிப்பாக இளைய சமுதாயம் எதிர்காலத்துக்கும் முழுமையான வாழ்க்கைக்கும் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டிருக்கிறதா?

சற்று நின்று யோசிக்க தோழமையுடன் அழைக்கிறது.

**கல்கி - ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் இணைந்து வழங்கும்**
**நில், கவனி, வெற்றிகொள்! - நிகழ்ச்சி**

நிஜ மில்லெனியம் தொடங்குகிற நிறைவான நேரத்தில் ஆரம்பிக்கும் இத்திட்டம் மாதமொரு நிகழ்ச்சியாக சென்னையின் பல்வேறு பகுதிகளில் ஆண்டு முழுதும் நடைபெறும்.

**முதல் நிகழ்ச்சி :**
**எனக்கு நானே முதலாளி**
(சுயதொழில் குறித்த கருத்தரங்கு)

நாள் : 7.1.2001 ஞாயிற்றுக் கிழமை.
இடம் : பாரதீய வித்யா பவன் அரங்கம், மயிலை, சென்னை - 4
நேரம் : காலை பத்து மணி.
நில், கவனி, வெற்றிகொள் நிகழ்ச்சியைத் துவக்கி வைத்து எழுச்சியுரை ஆற்றுபவர்:

**கவிப்பேரரசு வைரமுத்து**

ஆக்க உரை : **டி.எஸ்.ராகவன்** (முன்னாள் சேர்மன்- இந்தியன் வங்கி)

சுயதொழில் முனைவோர், எதிர்கால முனைவோர் மட்டுமின்றி அனைத்து தரப்பினருக்கும் பயனுள்ளதாகவும் சுவாரஸ்யமானதாகவும் நிகழ்ச்சி அமையும்.

கல்கி ஒவ்வொரு வாரமும் உங்கள் மேன்மைக்காகவே வெளியாகி வருவதை அறிவீர்கள். எங்கள் அக்கறையைப் பகிர்ந்து கொண்டு ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் எங்களுடன் இணைந்து இனிய வரவேற்பு அளிக்கிறது.

**திரண்டு வந்து பங்கேற்று திருப்தியுடன் திரும்புங்கள்!**

**நிகழ்ச்சி நிரல் :**

| | | | |
|---|---|---|---|
| காலை | 10.00 மணி | : இறை வணக்கம் | : திரு. ராஜ்குமார் பாரதி |
| | 10.05 | : வரவேற்புரை | : திரு. எம்.முரளி (ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்) |
| | 10.15 | : சிறப்புரை | : கவிப்பேரரசு வைரமுத்து |
| | 10.45 | : ஆக்கவுரை | : திரு டி.எஸ்.ராகவன் |
| | 11.15 | : கேள்வி - பதில் நேரம் | |
| | 12.00 | : நன்றியுரை | |

**அனுமதி இலவசம்**

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com



• அன்பழகன் பிறந்த நாள் விழாவில்...

# தி.மு.க.வில் திக்... திக்...!

“மகா கூட்டணியாக இருந்தாலும், 'மகாமக' கூட்டணியாக இருந்தாலும் தி.மு.க. தயங்காமல் எதிர்கொள்ளும்” என்று அன்பழகன் பிறந்த நாள் விழா பொதுக் கூட்டத்தில் தொண்டர்களுக்கு உற்சாகமூட்டும்விதத்தில் கலைஞர் பேசினாலும், தி.மு.க. வட்டாரத்தில் திக்... திக்தான். பத்திரிகையாளர்களிடம் மனம் விட்டுப் பேசும் கழகப் பிரமுகர்கள், “எப்படி இருக்கும்... தலைவர் இந்த முறை நிறையவே நல்ல காரியங்களைச் செய்திருக்கிறார். மக்கள் ஆதரவான வோட்டுக்களைப் போடுவார்களா?'' என்று விசாரித்துக் கொண்டிருக்கிறார்கள். முதுமை காரணமாக கலைஞர் தமிழகமெங்கும் சுற்றுப்பயணம் செய்ய முடியுமா? என்ற கவலையும் சேர்ந்திருக்கிறது.

மழை பொய்த்துப் போகும் பட்சத்தில் வரும் ஏப்ரலில் சென்னையில் குடிநீர்ப் பஞ்சம் கொடுமையாக இருக்கும். அது போன்ற சூழலில் தி.மு.க. கோட்டையான சென்னையே கூட கலகலத்துப் போகலாம் என்று யோசனையில் இருக்கிறார்கள் அவர்கள். இதற்கிடையில் முக்கிய பிரமுகர்களுக்குப் பாதுகாப்பான (சென்னையில்தான்) தொகுதிகளைத் தேடும் பணியும் நடந்து வருகிறது. துறைமுகத்தில் மீண்டும் அன்பழகன் போட்டியிடுவாரா என்பது சந்தேகமே! த.மா.கா. கூட்டணியில் இல்லாத நிலையில் புரசை வாக்கத்துக்கு அவர் மாறக்கூடும். த.மா.காவில் கூட்டணி தொடர்பாகப் பிளவு ஏற்பட்டால் ரங்கநாதன் அதே புரசை தொகுதியில் தி.மு.க. ஆதரவுடன் போட்டியிடும் வாய்ப்பு கூட உண்டு. தேர்தல் நெருக்கத்தில் அணிகள் மாறக்கூடிய நிலை இருக்கிறது என்கிறார்கள். ஆயிரம் விளக்கு மற்றும் சேப்பாக்கம் தொகுதிகள் இந்த முறையும் தி.மு.க.வுக்குச் சாதகமாக இருக்குமா என்று பல்வேறு கோணங்களில் பல ஏஜென்ஸிகளால் ஆராயப்பட்டு வருகிறது.

குறிப்பாக பா.ஜ.க.வுடன் கூட்டணி இருப்பதால் அந்தத் தொகுதிகளில் கணிசமாக இருக்கும் சிறுபான்மையோர் தி.மு.க.வுக்கு ஆதரவுக்கரம் நீட்டுவார்களா? என்பதும் சந்தேகத்துடன் விவாதிக்கப்படுகிறது. இன்னமும் சில பிரமுகர்கள் சட்டமன்றத் தேர்தலைப் பொறுத்தமட்டில் பி.ஜே.பி.யின் கூட்டை ஒரு பெரும் சுமையாகத்தான் கருதுகிறார்கள். சேப்பாக்கம் தொகுதியைப் பொறுத்தவரை சிறுபான்மை

யோர் வோட்டுக்களைத் தவிர, அந்தத் தொகுதியில் நடக்கும் உட்கட்சி மோதல்கள் தலைமைக்குப் பெரிய தலைவலியாக இருக்கின்றன. இதன் காரணமாக முதல்வர் மீண்டும் அங்கு போட்டியிடுவாரா? என்று கேள்வி எழுந்திருக்கிறது.

சேப்பாக்கம் தொகுதி கழகச் செயலாளர் சுரேஷ் குமாருக்கும், இளைஞர் அணி அமைப்பாளர் ராஜேந்திரனுக்கும் நடக்கும் மோதல் அந்தப் பகுதியில் கழகத்தின் பெயரை நன்றாகவே டேமேஜ் செய்திருக்கிறது. இந்த இருவருக்கும் மத்தியில், "தலைமை யாரை ஆதரிக்கிறது" என்று தெரியாமல் பாக்கு வெட்டியில் அகப்பட்டதைப் போல முழிக்கிறார் மத்திய சென்னை மாவட்டச் செயலாளர் பரிதி.

அன்பழகன் பொதுக் கூட்டத்தில் மாவட்டச் செயலாளருக்குத் தகவல் சொல்லாமலேயே ஒரு லட்சம் ரூபாயைக் கட்சி நிதிக்கு கொடுத்து அதிர்ச்சி உண்டாக்கினார் சுரேஷ் குமார் என்கிறார்கள். வட சென்னைப் பகுதியில் கழகம் நன்றாகக் குறட்டை விட்டுக் கொண்டிருக்கிறது. தென் சென்னையில் கிட்டுவின் யதேச்சதிகாரத்தால் ஏகப்பட்ட மனக்கசப்புக்கள். "தலைவர் எங்கள் தொகுதியிலேயே போட்டியிடலாம். இப்போது நடக்கும் உட்கட்சி மோதல்கள் தேர்தலின் போது பின்னுக்குத் தள்ளப்பட்டு விடும். எல்லோரும் ஒன்றுபட்டு தலைவருக்காகவும் கட்சிக்காகவும் உழைப்போம்" என்கிறார் சேப்பாக்கம் கழகப் பிரமுகர். தி.மு.க.வில் மற்றொரு விவகாரமும் பிரமுகர்களுக்கு மனக்கசப்பை உண்டாக்கி இருக்கிறது. கிளைக் கழகச் செயலாளர் பகுதி பிரதிநிதி, பகுதிச் செயலாளர் ஆகிய பொறுப்புகளுக்குத் தேர்தல் மூலமாக, ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆனால் இளைஞர் அணி, மாணவர் அணி, இலக்கிய அணி போன்றவற்றிற்கு சிபாரிசு, செல்வாக்கு அடிப்படையில் அமைப்பாளர்கள், துணை அமைப்பாளர்கள் ஆகியோர் நியமிக்கப்படுகிறார்கள். இப்படி நியமிக்கப்படுபவர்கள் செய்யும் பந்தாவால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் புண்பட்டுப் போயிருக்கிறார்கள். அதிலும், குறிப்பாக இளைஞர் அணியில் நடக்கும் நியமனங்களால் பல மாவட்டங்களில் அதிருப்தி உருவாகியிருக்கிறது.

இப்படி கட்சியில் முணுமுணுப்புகள் இருப்பது தலைமையின் கவனத்துக்கு வந்ததன் காரணமாக, தேர்தல் வரை இனி எந்தப் பொறுப்புக்கும் நியமனங்கள் செய்யக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறதாம். கட்டுக்கோப்பாக இருந்து கழகத்தை மீண்டும் வெற்றி பெற வைப்பதில் கண்ணாக இருக்க வேண்டும் என்று அன்பு கலந்த கண்டிப்புடன் அறிவுறுத்தப்பட்டிருக்கிறார்கள் கட்சிக்காரர்கள்.

— சஞ்சயன்

படம் : ராஜன்

## சங்கீதம் என்பது...!

"வீணை வாசிப்பில் மிகச் சிறந்தவர் கலைவாணி என அழைக்கப்படும் சரஸ்வதி! அந்த சரஸ்வதி, வீணை வாசித்துக் கொண்டே இருந்தார். தம் வீணை வாசிப்புதான் மிகச் சிறந்தது என நினைத்துக் கொண்டிருந்த சரஸ்வதி, திடீரென யாரோ 'சபாஷ்' என்று சொன்னதும்,




• விழாவில்...

வாசிப்பதை சட்டென்று நிறுத்தி விட்டார். அவர் ஏன் நிறுத்தினார் என உங்களுக்கெல்லாம் தெரியுமா? சபாஷ் சொன்னவர் பார்வதி! அவர் சபாஷ் என்று சொன்னவிதம் அத்தனை அற்புதமான சங்கீதம் போல இருந்ததாம்! அந்த சங்கீதத்துக்கு முன் தமது வாசிப்பு ஒன்றுமே இல்லை என்றுதான் சரஸ்வதி வீணை வாசிப்பதை நிறுத்தினார். சங்கீதம் என்பது அத்தனை தெய்வீகமானது."

– நூற்றாண்டு விழா காணும் பார்த்தசாரதி சுவாமி சபா இசை விழா துவக்க நிகழ்ச்சியில் ஸ்ரீஜெயேந்திரர். காஞ்சிமடாதிபதி. ஓர் இசை விழாவைத் துவக்கி வைப்பது இதுதான் முதல் தடவை.

– மௌலி

படம்: யோகா

கல் தோன்றி மண் தோன்றா காலந்தொட்டு, சில சினிமா வசனங்கள் மாறவேயில்லை. அந்த டயலாக்குகள் இப்போது சின்னத் திரையிலும்! காதைப் பொத்திக் கொள்ளத் தோன்றும் அந்த மாதிரியான ஒருசில டயலாக்குகளை 'அரிகிரி' பாஸ்கியிடம் கொடுத்து ஊறுகாய் போடச் சொன்னோம் :



• பாஸ்கி



"ஒரு பொண்ணோட மனசு இன்னொரு பொண்ணுக்குத்தான் தெரியும்!"

"அப்ப எதுக்கு ஆம்பளைய லவ் பண்றீங்க? என்னைக்காவது ஒரு ஆணோட மனசு இன்னொரு ஆணுக்குத்தான் தெரியும்னு" நாங்க சொல்லியிருக்கமா?

"நீயில்லாம என்னால வாழவே முடியாது!"

"அப்படித்தான் நானும் நெனைச்சேன், அதெல்லாம் ஒண்ணுமில்லே, வேற KNEE வெச்சுக்கலாம், ஏன் கவலைப்படறே?"

"இன்னொரு ஜென்மம்னு இருந்தா, ஏன், ஏழு ஜென்மமும் நான் உங்க மனைவியாத்தான் வாழணும்!"

"கரெக்ட்! இதுதான் அந்த ஏழாவது ஜென்மம், தெரியுமா?"

"நா வயித்துல நெருப்பை கட்டிக்கிட்டு இருந்தேன்!"

"அதென்ன வயிறா இல்லை FIREஆ?

"என் தலைய அடகு வெச்சாவது நா என் பிள்ளையக் காப்பாத்துவேன்!"

"அப்ப ரெண்டு பிள்ளைகளை நீங்க காப்பாத்தலாம், ஏன்னா உங்களுக்கு இருக்கறது ரெட்டை மண்டை."

"இனி உங்க வீட்டு வாசல் படியை மிதிக்க மாட்டேன்!"

"நானே சொல்லணும்னு நெனைச்சேன், புதுசா நா பூசின சிமெண்ட் இன்னும் காயவே இல்லை!"

"என் பிள்ளை இன்னிக்குத்



# உளறுகாய் போடுகிறார் பாஸ்கி!

தறுதலையா அலையறானே!"

"உங்கப்பா சொன்ன மாதிரியே இப்ப நீயும் சொல்றியே?"

"மரியாதையா நம்ம குடும்ப ரகசியத்தைச் சொல்லிடு, இல்லாட்டி.... இல்லாட்டி?"

"ஸ்க்ரிப்ட் ரைட்டர்கிட்ட கேட்டுத் தெரிஞ்சுப் பேன்!"





"இன்னிக்கு நான் தெருல நடந்து போகும் போது நாலு பேர் கையெடுத்துக் கும்பிடறான்னா அதுக்குக் காரணம்...."

"நாலு பேருக்குக் கை இருக்கு, அதான்!"

"தயவுசெய்து நீ என்னை மறந்துடு."

"எப்படி மறக்க முடியும்?"

"உனக்கு அம்னீஷியான்னு நெனைச்சுக்கோ!"

"தயவுசெய்து என்னைத் தொடாதீங்க!"

"ஏன்?"

"ஒரு மாசமாச்சு நா குளிச்சு."

"மாப்பிள்ளே, என் பொண்ணைக் கண்கலங்காம பார்த்துக்கங்க..."

"ஆனா இப்ப அவளுக்கு மெட்ராஸ்-ஐ இருக்கே!"

"என் குடும்பத்தை அழிச்சுட்டே இல்லை. உன்னை பழிவாங்காம விடவே மாட்டேண்டா... டேய்ய்ய்ய்ய்ய்ய்..."

"நான் உன்னை விட வயசுல பெரியவன், 'டேய்'னு சொல்லாதே, 'சார்ர்ர்ர்ர்ர்ர்ர்'னு கத்து!"

"ஏண்டா, சின்ராசு, ஊர்ல எல்லாரும் என்ன பேசிக்கறாக?"

"தமிழ்தான்!"

"டேய்ய்ய்.... என் ரத்தம் கொதிக்குதுடா?"

"ஏ.சி.யை ஆன் பண்றேன். ஆறிடும். டோண்ட் வொர்ரி."

— அப்பு



## லஞ்சத்தை நிறுத்தாவிட்டால்...!

✉ திருவள்ளூர் அருகில் உள்ள பீமன் தோப்பு கிராமத்தில் கள்ளச் சாராயம் காய்ச்சுவதைத் தடுக்க முயன்றதற்காக இரண்டு பெண்கள் படுகொலை செய்யப்பட்ட பரிதாப சம்பவம் வேதனையளித்தது. திருடராய்ப் பார்த்துத்




திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது என்பதைப்போல காவலராய்ப் பார்த்து லஞ்சம் வாங்குவதை நிறுத்தாவிட்டால் எந்த தீய செயலையுமே ஒழிக்க முடியாது.

ஈரோடு-4, கன்னி. சுப்பிரமணியம்.

## கண்ணீரை வரவழைத்தது!

✉ "பச்சை மிளகாய் பஜ்ஜி" - சிறுகதை சிரிக்கச் சிரிக்க கண்ணீரை வரவழைத்து விட்டது. தலைப்புத்தான் காரம். ஆனால் கதையோ இனிக்கிறது. யதார்த்தத்தை

# வட்டமேஜை

தமது நடையால் ஹாஸ்யமாக்கிவிட்ட பாக்கியம் இராம சாமிக்குப் பாராட்டுகள்.

வேலூர், வி.என்.குமரவேல்

## யாருக்குப் பொறுப்பு!

✉ சாலை விபத்துகளும், மரணங்களும் குறித்த தலையங்கம் சிந்திக்க வைத்தது. சென்னை நகரில் முக்கியமான சில சிக்னல்களில் போலீஸ்காரர்களே சிக்னல்களை மதிக்காமல் செல்வது சகஜம். அரசு பஸ் டிரைவர்களும் அப்படியே. அமாவாசை நாட்களில் நடுரோட்டில் உடைக்கப்படும் பூசணியால் எத்தனை இரு சக்கர வாகன ஓட்டிகள் பரலோகம் போகிறார்கள். யாருக்குப் பொறுப்பு இருக்கிறது இந்த "ஜனநாயக" நாட்டில்?

சென்னை-5, தெய்வசிகாமணி.

## அநியாயம்!

✉ ஒரு மட்டமான (என் சகியே) படத்திற்கு கல்கியின் ஒரு முழு பக்கத்தை வேஸ்ட் செய்திருப்பது-- (அ) அநியாயம் (ஆ) தேவையற்றது (இ) டூ மச்.

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

## மறந்துவிட்டது ஆச்சர்யம்!

✉ ஜாதி மோதல்களுக்குக் காரணம் திராவிட இயக்கங்களே என்று கூறும் டாக்டர் சேதுராமன், காமராஜர், முத்து ராமலிங்கத் தேவர் காலத்திலும் இதே ஜாதி மோதல் வந்திருப்பதை மறந்துவிட்டதுதான் ஆச்சரியம்!

கும்பகோணம், புலவர் எஸ்.கே.மூர்த்தி.

## பாராட்டத்தக்கது!

✉ சூப்பர் ஸ்டார் இமேஜை தக்க வைத்துக் கொள்ளவும் முடியாது; உயர்த்தவும் முடியாது என தி[illegible]லகச் சூழ்நிலையை நடிகர் மம்மூட்டி யதார்த்தமாகக் கூறியுள்ளது பாராட்டத்தக்கது.

மேட்டுப்பாளையம், பி.ஏ.வதூத்

## புரியும்படியாய் இருந்தது!

✉ மனிதம் என்பது என்னங்க? என்ற கேள்விக்குப் 'பக்கத்து வீட்டுக்காரனுக்குக் காலில் முள் தைக்கும்போது உங்க மனசு வலிச்சா அதாங்க மனிதம்' என்ற தராசின் பதில் எல்லோருக்கும் எளிதில் புரியும் வண்ணம் இருந்தது.

மணியக்காரன்பாளையம், ஏ.ஜி. கல்யாண சுந்தரம்.

## என்ன சொல்லிப் பாராட்ட?

✉ அரசியல் விஷயங்களுக்கு மட்டுமே தலையங்கம் எழுதுவதென்பது பத்திரிகைகளின் எழுதப்படாத விதியாகிவிட்ட இந்த கால கட்டத்தில் சாலை விபத்தினை ஒரு பொருட்டாக மதித்து கல்கி எழுதியிருந்த தலையங்கத்தை என்ன சொல்லிப் பாராட்ட? சிம்ப்ளி சுப்பர்ப்!

ஆதமங்கலம் புதூர், கே. சண்முகம்

# தமிழக அரசின் நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

## நடத்தும் டெபாசிட் திரட்டும் முகாம்கள்

உள்ளூர் காசோலைகள் ஏற்றுக் கொள்ளப்படும்.





| காரைக்குடி | சிவகங்கை | மதுரை |
|---|---|---|
| நாள் : 3 ஜனவரி, 2001. | நாள் : 4 ஜனவரி, 2001. | நாள் : 5 & 6 ஜனவரி, 2001. |
| இடம் : சேம்பர் ஆஃப் காமர்ஸ் & இண்டஸ்ட்ரீஸ் 34, மேலவூரணி வாய்க்கால் தெரு, காரைக்குடி - 630 001. | இடம் : சிவகாமி முத்துகாமாட்சி திருமண மண்டபம் 3, மதுரை சாலை, சிவகங்கை. | இடம் : YMCA (மெயின் கார்டு ஸ்கொயர்) மீனாட்சி அம்மன் கோயில் அருகில், மதுரை - 625 001. |
| தொலைபேசி : 437297 | தொலைபேசி : 44606 | தொலைபேசி : 746649 / 740591 |

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

**12.12%** — 36 மாதங்களுக்கும் அதற்கும் மேலுமான டெபாசிட்டுகளுக்கு காலாண்டுக்கான வட்டிவிகிதம்

**16.34%** — 60 மாதங்களுக்கு (மாதாந்திர கூட்டுவட்டி ஆண்டிற்கு 12.00%)

*மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*




## தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

84, டி.டி.கே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

# அவமானச் சின்னமாய் ஒரு கிராமம்!

**தா**ழ்த்தப்பட்ட மக்களின் ஆலய நுழைவுப் போராட்டத்திற்கு வெற்றி. அதிகாரிகள் முன்னிலையில் சாமி கும்பிட்டனர்.

· இப்படியொரு செய்தி தினசரிப் பத்திரிகைகளில் வெளி வந்தபோது, அதிர்ச்சியும் மகிழ்ச்சியும் நம்மை ஒரு சேரத் தாக்கியது. சுதந்திர இந்தியாவில் இதுபோன்ற கோவில்கள் இன்னும் இருக்கவே செய்கின்றன என்பது அதிர்ச்சி. இத்தனை வருடங்களுக்குப் பிறகாவது தாழ்த்தப்பட்ட மக்கள் அனுமதிக்கப்பட்டிருப்பது மகிழ்ச்சி. அந்த மகிழ்ச்சியை பகிர்ந்து வரப் புறப்பட்டோம். ஆனால் சம்பந்தப்பட்ட ஊரை அடைந்ததும் நம்மைத் தாக்கியது மாபெரும் அதிர்ச்சி!

**அ**ழகாபுரம். அரியலூர் மாவட்டம், ஆண்டிமடம் அருகேயுள்ள கிராமம். ஊரின் மக்கள் தொகையில் பெரும்பான்மையானோர் வன்னிய சமூகத்தினர். ஊருக்கு ஒதுக்குப்புறமாக இருக்கும் குடிசைப் பகுதியில் தாழ்த்தப்பட்ட மக்கள், கூலி விவசாயத் தொழிலாளர்களாக வசிக்கிறார்கள். ஆனால் ஊரின் நடு நாயகமாக இருக்கும் சிவன் கோவிலில் நுழைந்து, வழிபட அவர்களுக்கு அனுமதி இல்லை. இந்த நிலையை மாற்ற மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தாசில்தார், போலீஸ் பாதுகாப்புடன் கடந்த டிசம்பர் பதினோராம் தேதி ஆலய நுழைவுப் போராட்டம் நடத்த முயன்றபோது கலவரம் வெடிக்கும் சூழ்நிலை ஏற்பட்டதால் ஆலயப் பிரவேசம் நிறுத்தப்பட்டிருக்கிறது. அதன்பிறகு இரு தரப்பிலும் பேச்சுவார்த்தை நடத்தப்பட்டு கடந்த மாதம் பதினேழாம் தேதி ஆலயப் பிரவேசம் செய்திருக்கிறார்கள். பிரச்னை தீர்ந்துவிட்ட நிலையில், அன்பும், அமைதியும், அழகாபுரத்தில் ஆட்சி செய்யும் என்று நினைத்திருந்தால் மாற்றிக் கொள்ளுங்கள். துப்பாக்கி ஏந்திய போலீஸ் துணையுடன் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு வாழ்ந்து





• அய்யாக்கண்ணு

கொண்டிருக்கிறார்கள் உரிமை கேட்டுப் போராடியவர்கள். ஆலயப் பிரவேசத்திற்கு அவர்கள் கொடுத்திருக்கும் விலை மிகவும் கொடியது.



• கிருஷ்ணசாமி



• ரங்கநாதன்



• நாகரத்தினம்

"நாங்க பிடிவாதமா இருந்து கோவிலுக்குள்ளே போனோம். இதனால் வன்னியர்கள் யாரும் எங்களுடன் பேசக்கூடாது. விவசாய வேலை தரக்கூடாது. மீறி நடப்பவர்களுக்கு ஐந்நூறு ரூபாய் அபராதம். அது மட்டுமில்லே, ஊரிலிருந்தும் ஒதுக்கி வெச்சுடுவோம்ன்னு கட்டுப்பாடு போட்டுட்டாங்க. எங்க ஆடுமாடுகள் அவங்க ஏரியாவுக்குப் போயிட்டா திரும்ப தரமுடியாதுன்னு சொல்லிட்டாங்க. இரட்டைக் குவளையிலாவது இதுவரைக்கும் டீ கிடைச்சுது. இப்போ அதுவும் கிடையாதுன்னுட்டாங்க. புள்ளகுட்டிங்க வயித்த கழுவணுமேங்கிற ஒரே காரணத்துக்காக ஆண்டி மடத்துக்கு வேலை தேடிப் போறோம். கோயில், சுயமரியாதைன்னு பேசி எங்க வயித்துல நாங்களே அடிச்சுகிட்டோம்" என்று அழாத குறையாகச் சொன்னார் இந்தப் போராட்டத்திற்குத் தலைமை தாங்கி நடத்திய நாகரத்தினம். இவர் ஆண்டிமடம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஒன்றியச் செயலாளர்.



• சிவன் கோவில்

"எந்த ஆட்சியிலும் செய்ய முடியாத ஒரு சமூகப் புரட்சியை நாங்கள் செய்திருக்கிறோம். தலித் சகோதரர்களை நாங்களே கோவிலுக்கு அனுமதித்து விட்டோம்" என்று வன்னியர் சங்கத்தின் மாநிலத் தலைவர் காடுவெட்டி குரு கூறியிருப்பது உண்மையில்லையா? என்று கேட்டதும், நடந்ததை, அங்கே நடப்பதை விவரித்தார் நாகரத்தினம்.

"அழகாபுர தீண்டாமைக்கு எதிரா நாங்க போராட்டம் நடத்தறது புதுசு இல்லே. மிதிவண்டியிலே ஏறிப் போறது, மீசை வெச்சுக்கிறது, கிழ்பாச்சி கட்டிகிறது (வேட்டியை மடித்துக் கட்டுதல்), இதுக்கெல்லாம் அனுமதி மறுத்தாங்க. 1983 வரைக்கும் இதுதான் இங்கே நிலைமை. அப்போ மிதிவண்டியில் ஏறிப் போகும் போராட்டம் நடத்தினோம். அதுக்கப்புறம்தான் மிதி வண்டியிலே ஏறிப் போக முடிஞ்சது. அரசாங்கம் கட்டிக் கொடுத்த சமுதாயக் கூடத்துல கல்யாணம் காட்சின்னு எதையும் எங்களை நடத்த விடுறதுல்லே. பிறகு சுடுகாட்டுப் பாதைக்குப் போராடித் தோத்துட்டோம். பல பிரச்னைகளிலே எங்களுக்கு வெற்றி கிடைச்சாலும், அவங்க டீ கடையிலே இன்னும் கடைபிடிக்கிற இரட்டை தம்ளர் முறையை

மட்டும் எங்களால ஒண்ணும் செய்ய முடியலே. இதுதான் எங்களுக்குப் பெரிய அவமானமா இருந்தது. ஒவ்வொரு மொடக்கு டீயையும் விஷம் மாதிரி கஷ்டப்பட்டு குடிப்போம். ஆனா இதே ஆளுங்க. ஆண்டி மடம், ஜெயங் கொண்டம், விருத்தாசலம்ன்னு பக்கத்துல இருக்கிற டவுனுக்கு வந்தாப் பேதமில்லாம ஒரே கடையிலே டீ குடிச்சிட்டுப் போறாங்க. கிராமத்துல மட்டும் அவங்களுக்குப் பேய் புடிச்சுடுது. இந்த மாதிரி நிலைமையிலேதான் மார்க்சிஸ்ட் கட்சியோட மாவட்ட செயற் குழுக் கூட்டம் கூடியது.

மாவட்டம் முழுக்க தீண்டாமை ஒழிப்பு போராட்டம் நடத்தப் போறோம். அவங்க அவங்க ஒன்றியத்துல இருக்கிற பிரச்னை களைச் சொல்லுங்கன்னு கேட்டாங்க. என்னோட ஒன்றியத்துல ஓலையூர், அகரம், சிலுவைச்சேரின்னு ஒரு டஜன் கிராமத்துல ரெட்டை தம்ளர் முறை இருக்குன்னு சொன்னேன். ஒரு தோழர் கோபமா எழுந்து 'உன்னோட ஊரை எதுக்கு மறைச்சே. முதல்லே அங்கே ஒழிச்சுட்டு அப்புறம் எங்க ஊரைப் பத்திப் பேசு'ன்னார். பச்சை மொளகாயைக் கடிச்ச மாதிரி சுள்ளுன்னு உரைச்சது. ரெட்டை தம்ளருக்காகப் போராடத் தொடங்கினேன். ஆனா சாமி கும்பிட முடியாத கோவில் ஏதாவது இருக்கான்னு கேட்டபோதுதான் எங்க ஊர் சிவன் கோவில் ஞாபகம் வந்தது. கோவில் பத்திச் சொன்னதும் இத்தனை நாளும் ஏன் மௌனமா இருந்திங்க. டிசம்பர் பதினோ ராம் தேதி ஆலய நுழைவுப் போராட்டம் நடத்துங்க. மார்க்சிஸ்ட் விவசாயத் தொழி லாளர் சங்கத்தின் மாநிலப் பொதுச் செயலாளர் திருநாவுக்கரசு தலைமை தாங்குவார்ன்னு தேதி குடுத்துட்டாங்க. எங்களால ஒண்ணும் சொல்ல முடியலே. பாரதி பிறந்த நாளில் ஆலய நுழைவுப் போராட்டம்ன்னு அக்டோபர் மாசமே நோட்டீஸ் அடிச்சிட்டோம். நோட்டீஸை பார்த்து கொதிச்சுப் போயிட்டாங்க. கும்பல் கும்பலா காலனிப் பக்கம் வந்து 'எவன் கோவில் பக்கம் வரேன்னு சொல்றவன். வர்ற பயலுகளுக்குத் தலையிருக்காது'ன்னு அரிவாளைக் காட்டி மிரட்டிட்டும் போனாங்க. நிலமை மோசமாயிட்டதாலே அதிகாரிகள்கிட்டே போயிட்டோம். ஆனா லும் போராட்டத்தப்போ எங்க ஜனங்க பாதி பேரு உயிருக்குப் பயந்து வெளியூரு போயிட்டாங்க. நாங்க ஐம்பது பேர்தான் கோயிலுக்குக் கிளம்பினோம். அவங்க தரப்புல சுத்துபட்டு ஊர்கள், வெளி மாவட்டங்கள்லேர்ந்து பத்து பதினைஞ்சு டெம்போ நிறைய ஆள் திரட்டிட்டாங்க. நாங்க கோயிலை நோக்கி நடக்கறோம்..." என்று திகிலாக விவரித்து கொண்டிருந்தவர் கொஞ்சம் நிறுத்தி, 'இத்தனை கூட்டத்தை எப்படி கூட்டினாங்க தெரியுங்களா?' என்று கேட்டுவிட்டு தொடர்ந்தார் - "எங்க போராட்டத்துக்கு இரண்டு நாள் முன்னால் "நமது சமுதாய இளைஞர்களின் எதிர்காலம் காக்க அய்யாவின் தொண்டனே அணி திரண்டு வா" என்று உணர்ச்சிகரமா தினசரி பத்திரிகைகள்ளே விளம்பரம் கொடுத்துட் டாங்க. இதைப் படிச்சிட்டு வெளியூரிலிருந்து வந்த கூட்டம் கொலை வெறியோட நின்னுச்சு. "கலெக்டர் வந்தா கையை வெட்டுவோம் - போலீஸ் வந்த தலையை வெட்டுவோம்"ன்னு கத்துறாங்க. அதிகாரி கள் பார்த்துட்டு நிலமை மோசம்ன்னு தெரிஞ்சதும், பேசித் தீர்த்துக்கலாம்ன்னு போராட்டத்தைக் கைவிட்டுடச் சொன் னாங்க. அதைக் கேட்டுக் கைவிட்டோம். அதுக்குப் பிறகு பேச்சுவார்த்தைக்குக் கூப்பிட்டப்போ. அரிவாளோட கூட்டம் கூட்டமா வந்தாங்க. எங்களை தாலுக்கா ஆபீஸ் வாசல்லே வெச்சு மிரட்டி அனுப் பினாங்க. அதுக்குள்ளே பத்திரிகைகள்ல செய்தி வந்திருச்சி. அப்புறம்தான் வேறே வழி இல்லேன்னு காடுவெட்டி குரு தலைமையிலே பேசித் தீர்த்து ஆலய பிர வேசத்துக்கு ஒத்துக்கிட்டாங்க" என்றவரிடம் "வரும் சட்டமன்றத் தேர்தலில் ஆண்டி மடம்

"எலெக்ஷன் தேதி இன்னும் அறிவிக்கலைன்னு எப்படி உறுதியாச் சொல்றீங்க?"
"ரஜினி இன்னும் இமயமலைக்கோ, அமெரிக்காவுக்கோ போகலையே...!"
- சீர்காழி ரேவதி



தொகுதி வேட்பாளராக காடுவெட்டி குருவை ராமதாஸ் அறிவித்து விட்டதால், தாழ்த்தப்பட்டோர் வாக்குகளைப் பெறத் தான் இப்படியொரு ஆலய அனுமதியை பெருந்தன்மையாக விட்டுக் கொடுத்ததாக பேசுகிறார்களே?'' என்று கேட்டோம். "அதுதான் நிஜமான காரணம். ஆலயத்தில் வழிபடுவது எங்கள் உரிமை. அதை இத்தனை வருடமும் தட்டிப் பறித்ததைக் கூட மறந்துவிட நாங்கள் தயார். அதே நேரம் எங்களது எல்லா வோட்டுகளையும் இவருக்கே போட நாங்கள் ரெடி. அதற்கு விலையாக, முதலில் இரட்டை தம்ளர் முறையை குரு ஒழித்துக் காட்டட்டும்.'' என்று சவால் விடுகிறார்.

ஆலயப் பிரவேசம் செய்த பத்து பேரில் எண்பது வயது அய்யாக்கண்ணுவும் ஒருவர். "இந்த ஊருலேயே பிறந்து இங்கேயே வளர்ந்து, வாழ்ந்து முடிச்சுட்டேன். சின்ன வயசுலேர்ந்து அந்தக் கோவில் பக்கமா போகும்போதெல்லாம் யாருக்கும் தெரியாம எட்டிப் பார்ப்பேன். இருட்டாத்தான் இருக்கும். சாகறதுக்குள்ளே ஒரு தடவையாவது உள்ளே போக முடியாதான்னு நினைச்சுக்குவேன். இப்போ அது நிறைவேறிடுச்சு'' என்று தழுதழுக்கிறார்.

மனித நேயத்தையும், மனசாட்சியையும் தொலைத்துவிட்டு வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு சில உள்ளூர்ப் பிரமுகர்கள், பா.ம.க.வின் மாவட்ட அளவில் முக்கியப் பொறுப்புகளில் இருக்கிறார்களாம். இவர்களுக்குப் பயந்தே வரிய நிலையில் உள்ள வன்னியர் மக்கள் ஊர்க் கட்டுப்பாடு என்ற போர்வையில் ஒன்று இரண்டு எதிர்க்க நிர்பந்திக்கப்படுகிறார்களாம். மற்றபடி 'அந்த அப்பாவி ஜனங்களைக் கொடுமைப்படுத்தி எங்களுக்கு என்ன ஆகப் போகுது' என்கிறார் ஓர் ஏழை வன்னிய இளைஞர்.

அழகாபுரம் பா.ம.க. தரப்பினர் என்ன சொல்கிறார்கள்? கிராம பஞ்சாயத்து தலைவர், மாவட்ட பொறுப்பிலிருப்பவர்கள் என பலரைத் தேடியும் நம்மிடமிருந்து விலகிப் போனதால் ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் கிருஷ்ணமூர்த்தியை சந்தித்தோம்.

"தலித்களின் வாக்குகள் எங்களுக்குக் கிடைக்கக் கூடாது என்பதற்காகவே, விடுதலைச் சிறுத்தைகள், குழப்பத்தைக் கிளப்பி



"நம்ம தலைவர் ஒரே குழப்பத்தில் இருக்கார்!''

"எதுக்கு!''

''தேர்தல் பிரச்சாரத்துக்கு அசாருதீனைக் கூப்பிடறதா அல்லது வீரப்பனைக் கூப்பிறதான்னு!''

- புளியரை கணேசன்

விடுகிறார்கள். இங்குள்ள தாழ்த்தப்பட்ட சகோதரர்களின் கோவில் திருவிழாவுக்கு நன்கொடை தருகிறோம். காவடி, கரகத்தை ஊருக்குள் அனுமதிக்கிறோம். அப்படி வரும்போது எங்கள் ஜனங்களே கற்பூரம் ஏத்துவார்கள். இதையெல்லாம் மறந்துவிட்டுப் பேசுகிறார்கள்'' என்கிறவர் இரட்டை தம்ளர் பற்றி கடைசிவரை பதில் சொல்லாமல் மழுப்பிவிட்டார்.

''நாங்க எங்களுக்குன்னு தனியா காமாட்சி அம்மன் கோவில் கட்டி வெச்சிருக்கோம். அவங்க மாரியம்மன் கோவில் கட்டி வெச்சி கும்புடுறாங்க. நாங்க அவுங்க கோவில் பக்கம் போக மாட்டோம். அதே மாதிரி எங்க கோவில் பக்கமும் விடமாட்டோம். சிவன் கோவில் அறநிலையத் துறை கிட்டே இருந்ததுனால பொதுவா போயிடுச்சி. அதுவே அவங்க கால் வெச்சிட்டதாலே எங்க ஆளுங்க யாரும் அந்தக் கோவில் வாசலை மிதிக்க மாட்டோம்ன்னு சொல்றாங்க'' என்ற அழகாபுரம் கோவில் பூசாரி ரங்கநாதனின் பகிரங்க வாக்குமூலத்தைக் கேட்டு நமக்கு பகீரென்றது.

அழகாபுரத்தில் தாழ்த்தப்பட்டவர்கள் நுழைய முடியாத இன்னொரு கோவிலும் இருப்பதை எந்த தெய்வத்திடம் போய் முறையிடுவது?

— சுட்டு

படங்கள் : ராஜன்

ராஜீவ்காந்தி உடல் இருந்த இடத்தைச் சுற்றித் தேடி வந்தபோதுதான் சிதைந்து போன ஒரு பொருள் கண்ணில் பட்டது. tape fastener என்று சொல்வார்களே அது தான் அந்தச் சிதைந்து போய் கிடைத்த பொருள். ஷூக்கள் மற்றும் பெல்ட், மணி பர்ஸ் ஆகியவற்றின் பகுதிகளைச் சேர்ப் பதற்கு 'ஸ்பான்ச்' போன்று ஒரு பொரு ளைப் பயன்படுத்துவார்கள். அதைப் பிரிக்கும்போது கூட 'டர்' என்று ஒரு சப்தம் வரும். இந்த 'ஸ்பான்ச்' போன்ற சமாச்சாரம்தான் tape fastener என் பது.

உடனே தீவிர மாக அது போன்ற துண்டுகளைச் சுற்றிலும் தேடிப் பிடித்து எடுத்தோம். இறந்து போனவர் கள் மலர்ந்த தாமரை யின் வடிவத்தில் (lotus formation) விழுந்து கிடந்தபடியால் சில முக்கியத் தடயங்கள் குறிப்பிட்ட வட்டத் திலேயே கிடைத்தன. எல்லா துண்டுகளையும் பொறுத்திப் பார்த்தால் ஒரு பெல்ட் உருவானது. இதை velcro belt என்றும் சொல்வார்கள். முதுகு வலி போன்றவற் றிற்கு இது போன்ற பெல்டைப் பயன் படுத்துவார்கள். கொலைகாரி, பெல்ட் வெடிகுண்டைப் பயன் படுத்தியிருக்கிறாள் என்பது தெரிந்துவிட் டது. ஆனால் ஆர்.டி. எக்ஸ் வெடிமருந்தை எங்கே வைத்து இருந்தாள் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. அப்போது தான் என் உதவியாளர் டெனிம் ஜீன்ஸ் துணித் துண்டுகளைச் சேகரித்துக் கொண்டு வந் தார். அவற்றை முறைப்படுத்தி வைத்து பார்த்த பிறகு ஒரு ஏப்ரன் (apron) போல் அது உருப்பெற்றது. ஆனால் இந்த ஏப்ரனில் பின்புறமும் இருந்தது. எந்த ஒரு வெடி குண்டையும் வெடிக்க வைக்க பாட்டரி, ஒயரிங், டெட்டனேட்டர் ஆகியவை தேவை. நெடு நேர தேடுதலுக்குப் பின் இவற்றைக் கண்டுபிடித்தோம்.

இறந்து போன பதினாறு பேர்களின் உடல்கள் அடையாளம் காட்டப்பட்ட பிறகு, அடையாளம் காணப்படாமல் தலை, இடது கை, இடுப்புக்கு கீழ்



• பத்மபூஷன் விருது பெறுகிறார் சந்திரசேகரன்



• ராஜீவ்காந்தி

இரண்டு கால்கள் ( சென்ற இதழில் ஒரு கால் தான் கிடைத்தது என்று தவறாக வந்து விட்டது) மட்டும் கிடைத்த நிலையில் இருந்த பெண்தான் கொலைகாரி என்று சந்தேகப்பட்டாலும் அதை ஆணித்தரமாக நிரூபிக்க அந்தப் பெண்ணின் முழு உருவப் புகைப் படம் ஏதாவது கிடைக்குமா என்று துருவினோம். அந்த நேரத் தில்தான் போலீஸ் அதிகாரி ஒருவர் ஒரு ஃபிலிம் சுருளோடு எங்கள் அலுவலகத்திற்கு வந்தார். ஹரிபாபுவின் காமிராவில் இருந்த ஃபிலிம் சுருள்தான் அது. பகலில் நாங்கள் ஸ்பாட் டில் தேடும்போது காமிரா எதுவும் இல்லை. ஆனால் அந்த போலீஸ் அதிகாரி காலை யிலேயே அதை எடுத்து வைத்திருந்தது எனக்குத் தெரியாது. அதிர்ஷ்ட தேவதை




**"என்ன முருகன் உங்கள் கேள்விகளைப் பார்க்கும்போது நீங்கள் ஒரு வெடிகுண்டு நிபுணர் என்பது பளிச்சென்று தெரிகிறதே!" என்று நான் சொன்னேன்.**

# மடக்க முயன்ற மொட்டை முருகன்!

மீண்டும் சிரித்தாள்.

அந்த அதிகாரி கொடுத்த ஃபிலிம் சுருளை உடனடியாக பிரிண்ட் போட்டுப் பார்த்தோம். எட்டுப் படங்கள் தெளிவாக இருந்தன. ஒன்பதாவது படம் புகை மண்டலமாக இருந்தது. அந்தப் புகைப்படங்களில் இருந்தவர்களை, இறந்து போனவர்களின் உடல்களோடு ஒப்பிட்டுப் பார்த்தோம். சிவராஜன், சுபா, நளினி (இந்தப் பெயர்கள் எல்லாம் பின்னால்தான் தெரியும்) ஆகியோரது உடல்கள் இல்லாத காரணத்தால் குண்டு வெடிப்பில் அவர்கள் இறக்கவில்லை என்பது தெரிந்தது. கையில் ஜரிகை மாலை வைத்துக்கொண்டு, பச்சைக் கலர் சல்வார் (கம்மீஸ்) போட்டுக் கொண்டு இருந்த பெண்மணி ஹரிபாபு படத்தில் இருந்தாள். ஏற்கனவே எங்களுக்கு ஸ்ரீபெரும்புதூரில் ஒரு பச்சைக் கலர் சல்வார் முழுமையாக கிடைத்திருந்தது அல்லவா. ஒப்பிட்டுப் பார்த்தவுடன் புரிந்துவிட்டது. தலை (முன்புறம்) இடதுகை, இரண்டு கால்கள் மட்டுமே கிடைத்த அந்தப் பெண், இந்த சல்வார் போட்டுக் கொண்டிருந்தவள்தான் என்பது உறுதியாகத் தெரிந்துவிட்டது. புகைப் படத்தை பார்ட், பார்ட்டாக பெரிது படுத்திப் பார்க்கும் போது நெற்றிப் பொட்டு, விரல்களில் போட்டிருந்த நகப் பூச்சு, கால் கொலுசு ஆகியவை மிகவும் பொருந்தி வந்தன. ராஜீவ் கொலைக்குக் காரணமானவள் இவள்தான் என்று தெரிந்துவிட்டது. முதுகில் வெடிமருந்தைச் சுமந்து வந்திருக்கிறார்கள். ஜீன்ஸ் துணியில் ஏப்ரன் போல் செய்யப்பட்டிருந்த அமைப்பில், ஆர்.டி.எக்ஸ் வெடிமருந்தைச் சப்பாத்தி மாவு போல தட்டையாக வைத்து அதில் ஆயிரக்கணக்கில் இரும்பு குண்டுகளை (பதித்து) வைத்திருக்கிறார்கள். சப்பாத்தி மாவில் மிளகை பதித்து வைத்தது போல என்று சொல்லலாம். அவற்றிற்குள் நான்கு டெட்டனேட்டர்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. ஏப்ரன் கீழ்ப்புறம் இணைக்கப்பட்டு, பெல்டுடன் தொடர்பு ஏற்படுத்தப்பட்டு இருக்கிறது. ராஜீவை நெருங்கியவுடன் காலைத் தொடுவதுபோல் கீழே குனிந்து வலது கையால் பெல்டில் இருந்த ஸ்விட்சை இயக்கி இருக்கிறாள். அவளின் முதுகுப்புறம் பார்த்து குனிந்த ராஜீவ் காந்திக்கு வெடிகுண்டு பாதிப்பு முகத்தில் கடுமையாக ஏற்பட்டுவிட்டது. கிட்டத்தட்ட அரை கிலோ வெடிமருந்து அவள் முதுகில் இருந்திருக்கலாம் என்று கண்டுபிடித்தோம்.

அதுவரை உலக சரித்திரத்தில் மனித வெடிகுண்டு



தடய அறிவியல் நிபுணர்
டாக்டர் பி. சந்திரசேகரன்

என்பதே கிடையாது. ராஜீவைக் கொன்ற அந்தப் பெண்மணிதான் முதல் மனித வெடிகுண்டு. இதைக் கண்டுபிடித்தவுடன் நான் செய்த காரியம் பத்திரிகைகளுக்கு அறிவித்ததுதான்.

ராஜீவ் மரணத்துக்குக் காரணமான வர்கள் யார், எந்த இயக்கத்தைச் சேர்ந் தவர்கள் என்பது பற்றியெல்லாம் கருத்து சொல்வது தடய அறிவியல் விஞ்ஞானிக்கு அவசியமில்லாத ஒன்று. ஆனால் அந்தச் சம்பவம் எப்படி நடந்தது என்பதை உடனடியாகச் சொல்வது வதந்திகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் என்பது என் கருத்து.

இது தவிர முக்கியமாக, வி.வி.ஐ.பி, மரணங்களில், பிற்காலத்தில் போலீஸ் விசாரணையின்போது செய்யப்படும் சில "அழுத்தங்களின்" காரணமாக உண்மைகள் திசை திருப்பப்படும் வாய்ப்பிருக்கிறது. எனவேதான் 'பெண் வடிவில் வந்த மனித வெடிகுண்டுதான் ராஜீவ் மரணத்துக்குக் காரணம்' என்று நான் அறிவித்தேன். நான் இப்படி அறிவித்தது போலீஸ் அதிகாரி களுக்கும் தலைமைச் செயலக உயர் அதி காரிகளுக்கும் பிடிக்கவில்லை. "டி.ஜி.பி.யின் உத்தரவு இல்லாமல் பத்திரிகைகளுக்கு எந்தத் தகவலும் தரக்கூடாது" என்றார்கள். "நான் போலீஸுக்குக் கீழ் செயல்படவில்லை, நானே ஒரு துறைத் தலைவர், யாரிடமும் நான் அனுமதி கேட்க வேண்டிய அவசிய மில்லை' என்று பதில் சொன்னேன். அப்புறம் ஒன்றிரண்டு நாட்களுக்கு எனக்கு தொலைபேசியில் மிரட்டல்கள் வந்தன. நான் அவற்றைப் பற்றிக் கவலைப்பட வில்லை. அதற்குள் வழக்கு முழுமையாக சி.பி.ஐ.க்கு மாற்றப்பட்டு விட்டது.

கிட்டத்தட்ட ஒரு வருடம் கடுமையாக உழைத்து ராஜீவ் கொலைவழக்கில் தடய அறிவியல் துறை கண்டுபிடித்தவற்றை அறிக் கையாகத் தயாரித்தேன். தடா கோர்ட்டில் அந்த அறிக்கை தாக்கல் செய்யப்பட்டது. இருபத்தெட்டு நாட்கள் கோர்ட்டில் சாட்சி சொன்னேன். குற்றம் சாட்டப்பட்டவர் களின் வழக்கறிஞர்கள் என்னைக் குறுக்கு விசாரணை செய்தார்கள். ஆனால் முருகன் மட்டும் வழக்கறிஞர் வைத்துக் கொள்ளாமல் நேரடியாக குறுக்கு விசாரணை செய்தார். ஒரு குற்றவாளியின் வழக்கறிஞர் "ஆர்.டி. எக்ஸ் வெடிமருந்தை வெடிக்கச் செய்ய நான்கு டெட்டனேட்டர்கள் இருந்தன என்று சொல்கிறீர்கள்... அவை எங் கெங்கு இருந்தன? சொல்ல முடியுமா" என்று கேட்டார். நான் உடனே "அது கடவுளுக்கும் குண்டு தயாரித்தவனுக்கும்தான் தெரியும்" என்று சொன்னவுடன் எப்போதும் ஸீரிய ஸாக இருந்த நீதிபதி சித்திக்கூட சிரித்து விட்டார். முருகன் என்னைப் பார்த்து "சல்வார் கம்மீஸ் உடையை எம்பிராய்டரி வேலைப்பாடுகளோடு ஆயத்த ஆடையாக (Readymade) வாங்கலாம் அல்லவா?" என்று கேட்டார். நான் எந்தத் தயக்கமுமில்லாமல் டிசைன் போட்ட துணியை வாங்கியும் சல்வார் - கம்மீஸ் தைக்கலாம்' என்று சொன்னேன். அவர் குற்றவாளி கூண்டி லிருந்தே என்னைப் பார்த்து 'சபாஷ்' என்றார். அவர் சிக்கலான கேள்விகளைக் கேட்கும்போது நான் 'டக்'கென்று பதில் சொன்னால் சைகைகளாலே பாராட்டுவார். சாட்சிகள் சொல்வதையும், குறுக்கு விசார ணைகளையும் நோட்டுப் புத்தகத்தில் குறிப்பு எடுத்துக் கொள்வார். துப்பாக்கி, வெடி குண்டு மருந்துகள் ஆகியவற்றைப் பற்றி சற்று விலாவாரியாகவே கேட்டார் முருகன். "என்ன முருகன் உங்கள் கேள்விகளைப் பார்க்கும்போது நீங்கள் ஒரு வெடிகுண்டு

• • • • • • • • • • • • • •



"பாகவதர் ஏன் கைல மொபைல் வச்சிருக்கார்?"

"வெளியில இருந்து யாராவது கல், கத்தி, கம்பு, கடப்பாரையோட வந்தா சபா செக்ரட்டரி உடனே மொபைல் பண்ணிடுவாரு!"

— புளியரை கணேசன்

நிபுணர் என்பது பளிச்சென்று தெரிகிறதே!" என்று நான் சற்று நகைச்சுவையாகச் சொன்னேன். முருகன் மட்டும் என்னை மூன்று நாட்கள் குறுக்குவிசாரணை செய்தார். சல்வார் - கம்மீஸ் உடை பற்றிய கேள்விக்கு நான் இயல்பாக பதில் சொன்னாலும், வெளியே வந்தவுடன் ராதா வினோத ராஜு "ஸார் உஷாரா பதில் சொன்னீர்கள். அவன் கேள்வியின் நோக்கம் 'சல்வார் கம்மீஸ் உடை டெய்லரிடம் பெல்ட் போடுவதற்கு வசதியாக அளவு பெரிதாக தைக்கப்படுமாறு சொல்லப்பட்டது' என்ற நமது வாதத்தை உடைப்பதுதான்" என்றார். ராஜீவ் கொலை வழக்கில் தடய அறிவியலின் பங்களிப்பை இங்கு நான் முழுமையாகச் சொல்லவில்லை. சுருக்கமாகச் சொல்லியிருப்பதன் காரணமாக சில விஷயங்கள் விடுபட்டுப் போயிருக்கலாம். எந்த ஒரு சிறு தகவலையும் விடாமல், First Human Bomb என்ற ஒரு புத்தகம் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

இத்தனை வாரங்களாக என் சாதனைகளைப் படித்து வந்த வாசகர்களுக்கு ஒன்று. இந்தச் சாதனைகளைச் செய்ய முனையும் போது எனக்கேற்பட்ட சோதனைகள் பற்றி ஒரு தனி புத்தகம் போடலாம். இங்கு வெற்றி பொறாமையுடன் பார்க்கப்படுகிறது. வெற்றி பெற்றவன் பாராட்டப்படுவதற்குப் பதில் தாக்கப்படுகிறான். தடய அறிவியல் துறையில் எனது சேவையைப் பாராட்டி பத்ம பூஷன் விருது வழங்கப்பட்டிருக்கிறது. இந்தத் துறையில் யாரும் இது போன்ற உயர்ந்த விருதைப் பெற்றதில்லை... விருது பெற்றவுடன் என்னை நேரடியாகப் பாராட்டியவர்கள் மூப்பனாரும், திருநாவுக்கரசு (எம்.ஜி.ஆர் அண்ணா தி.மு.க) மட்டுமே. ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடுவும், முகம் தெரியாத மற்ற மாநில முதல்வர்களும் எனக்குப் பாராட்டுக் கடிதம் எழுதினார்கள். ஆனால் எனது கண்டுபிடிப்புகளைச் சட்டமன்றத்தில் சொல்லி, தங்கள் நெருக்கடிகளைச் சமாளித்துக் கொண்ட மற்ற தமிழக அரசியல்வாதிகளிடமிருந்து எந்த ஒரு பாராட்டும் இல்லை. தமிழ், தமிழன் என்று பேசுபவர்களுக்குச் சக தமிழனைப் பாராட்ட மனம் வரவில்லையே என்று ஏக்கப் பெருமூச்சு வருகிறது. தமிழக அரசியல்வாதிகளுக்கு என்னை இன்னமும் உயர்ந்த நிலையில் வைக்க மனது வரா விட்டாலும் நாட்டிலேயே கௌரவம் மிக்க

## மீண்டும் டைனோசர்



அறுபத்தைந்தாயிரம் வருடங்களுக்கு முன்னால் வாழ்ந்த டைனோசர்கள் பற்றி 'ஜுராசிக் பார்க்' மூலம் - உலகுக்குக் காட்டினார் ஸ்டீவன் ஸ்பீல் பெர்க்!

அதைப் போலவே அக்காலத்தில் மிகப் பெரிய காட்டில் டைனோசர்களுடன் மிகச் சிறிய விலங்குகளும் உலவியதை ஒன்றரை மணி நேர முழு கார்ட்டூன் படமாகத் தயாரித்து வெளியிட்டிருக்கின்றனர் வால்ட் டிஸ்னி நிறுவனத்தினர். ஆறு வருடங்களாக மூவாயிரத்து ஐந்நூறு கலைஞர்கள் உருவாக்கிய இப் படத்துக்கு ஆன செலவு மட்டும் இருநூற்றி இருபது மில்லியன் டாலர்கள்!

— பாரீஸ் பார்த்தசாரதி

தேசிய சட்டப்பள்ளி பல்கலைக் கழகம் எனக்குத் தடய அறிவியல் பேராசிரியர் பொறுப்பு கொடுத்து சிறப்பித்திருக்கிறது. விஞ்ஞானம் வளர, வளர கிரிமினல்களும் hi-tech ஆக மாறிவிட்டார்கள். அவர்களின் முகமூடிகளைக் கிழிக்கும் வகையில் என் பணி தொடர்ந்து அமையும் என்று கூறி விடைபெறுகிறேன். வணக்கம்!

(முற்றும்)

தொகுப்பு: **ப்ரியன் ஸ்ரீநிவாசன்**

கோட்டைக்குப் போகணும்னா
பின்னால் ஏறிக்கிட்டாத்தான் முடியும்...

கூட்டணி ஆட்சி




2001 ஜனவரி 7
விக்ரம மார்கழி 23
மலர் : 59
இதழ் : 23



# கல்கி


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## செங்கோட்டையில் படுகொலை!

காஷ்மீரில் தீவிரவாதிகளுக்கு எதிரான போர் நிறுத்தம் நீடிக்கப்பட்டுள்ளதாகப் பிரதமர் அறிவித்தால், தலைநகரிலேயே தீவிரவாதிகள் கைவரிசையைக் காட்டுகிறார்கள்! ராணுவ அலுவலகங்களும் குடியிருப்புகளும் உள்ள டெல்லியின் செங்கோட்டைக்குள் ஊடுருவி மூன்று ஜவான்களைக் கொலை செய்கிறார்கள்.

ஏ.கே.47 உள்பட பல ஆயுதங்களைக் கையில் வைத்திருந்தவர்கள் ஒலி-ஒளி காட்சி பார்க்க வந்த பார்வையாளர்களைப் போல் நடித்து ஏமாற்றியிருக்கிறார்கள்! திட்டமிட்டுக் கொலை செய்துவிட்டுத் தப்பி ஓடவும் முடிந்திருக்கிறது அவர்களால்!

பிரதமர் தீவிரவாதிகளுக்கும் பாகிஸ்தானுக்கும் நேசக்கரம் நீட்டுவதை வரவேற்கத்தான் வேண்டும். பாகிஸ்தான் அதிபர் முஷராஃபும் தமது பங்குக்கு எல்லைப் பகுதியில் நிறுத் தப்பட்டிருக்கும் பாகிஸ்தான் ராணுவ வீரர்களின் எண்ணிக்கையைப் பாதிக்குப் பாதி குறைத் துக் கொள்வதாக அறிவித்துள்ளார்.

ராஜதந்திர காரணங்களுக்காகவோ அல்லது மெய்யாகவே அமைதி விரும்பியோ இரு நாடுகளுமே தாக்குதல்களைக் கைவிடுவதென்று முடிவுக்கு வந்தாலும்கூட, இதுநாள்வரை

பாகிஸ்தான் ஏவிய கூலிப் படைகளும் வளர்த்துவிட்ட தீவிரவாத அமைப்புகளும் இரவோடு இரவாக ஆயுதங்களைத் துறந்துவிடமாட்டா.

உலகெங்கிலும் எழுந்த வன்முறை இயக்கங்களின் வரலாறைப் பார்த்தால், அவற்றின் இலக்கு அர்த்தமிழந்த பிறகும் அவ்வியக்கங்கள் தொடர்ந்து அழிவுப் பாதையில் சென்று உயிர்ச்சேதமும் பொருட்சேதமும் விளைவிப்பதைக் காணலாம். இந்தியாவில் வேரூன்றிவிட்ட இஸ்லாமிய தீவிரவாதம் இதற்கு விதிவிலக்கல்ல. இன்னும் சொல்லப் போனால் அமைதி அறிவிப்பும் போர் நிறுத்தமும் அவர்களுடைய எதிர்ப்புணர்வை அதிகரிக்கவே செய்யும்.

லஷ்கர்-இ-தொய்பா அமைப்பு இந்த எதிர்ப்புணர்வை வெளிப்படையாகவே பிரகடனப் படுத்தியிருக்கிறது. அமைதி முயற்சிகளை முறியடிக்கப் போவதாகவும் செங்கோட்டையைத் தாக்கியதைப் போல பிரதமர் அலுவலகத்தைக்கூட தாக்கப்போவதாகவும் அறிவித்துள்ளது.

இந்த அறிவிப்புகளெல்லாம் வாஜ்பாய் போர் நிறுத்தம் என்று சொன்ன நாள் முதலாக வெளிவந்து கொண்டிருக்கின்றன.

பிரதமரின் போர் நிறுத்த அறிவிப்பு அமைச்சரவையுடனும் ராணுவத் தலைவர்களுடனும் கலந்தாலோசித்து எடுக்கப்பட்ட முடிவாகத்தான் இருக்க முடியும்.

அவ்வாறிருக்க, இந்தப் போர் நிறுத்த அறிவிப்பை தீவிரவாதிகள் எவ்விதமாக எதிர்கொள்வார்கள், பாகிஸ்தான் எப்படி எதிர்கொள்ளும், இந்தியப் பிரதமரின் அறிவிப்புக்குப் பாக்.கின் ஒத்துழைப்பு கிடைத்தாலும் கூலிப் படைகள் பணியுமா? போன்ற விஷயங்களை எடைபோட்டு, தகுந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்க வேண்டும்.

அத்தகைய நடவடிக்கைகள் எடுக்கப்படாதது மட்டுமல்ல, செங்கோட்டை போன்ற ஒரு முக்கியமான பகுதியில் இருந்திருக்க வேண்டிய சராசரியான பாதுகாப்பு ஏற்பாடுகள் கூட அலட்சியப்படுத்தப்பட்டிருக்கின்றன. பாதுகாப்புப் பணியில் கவனக் குறைவு




இருந்ததாக பிரதமரே ஒப்புக் கொண்டிருக்கிறார்.

தீவிரவாதிகள் காவல் துறை, ராணுவ பாதுகாப்புகளை மீறி நுழைந்ததுமல்லாமல் கொலை செய்துவிட்டுத் தப்பியும் சென்றுள்ளனர்.

கமாண்டோ படைகள் அவர்களைத் தேடித் துரத்திச் சென்று, ஒரு சிலரைப் பிடித்துள்ள தாக வெளியாகியிருக்கும் செய்தியிலும் சர்ச்சை!

விசேஷ பாதுகாப்பு நிலவியிருக்க வேண்டிய காலகட்டத்தில், சராசரி பாதுகாப்புக் கூட சரியாக இயங்கவில்லை என்பது வருத்தத்துக்கும் கண்டனத்துக்குமுரியது.

கார்கில் ஊடுருவல் குறித்த கமிஷன் அறிக்கையில் உளவு அமைப்புகளின் தவறுகளும் செயல்திறனின்மையும் சுட்டிக் காட்டப்பட்டு கண்டனத்துக்கும் உள்ளாகியிருக்கின்றன. உளவுத் துறை சீரமைக்கப்படவேண்டும் என்ற சிபாரிசும் தரப்பட்டிருக்கிறது.

இந்த விவரங்களை மத்திய அமைச்சர்கள் அறிந்துதான் இருப்பார்கள். எனவே, பிரதமரின் துணிச்சல் மிக்க போர் நிறுத்த அறிக்கையையொட்டி உள்துறை மற்றும் ராணுவ அமைச்சகங்கள் கவனத்துடனும் எதிராளி எவ்வாறெல்லாம் இயங்கக் கூடும் என்ற எதிர்பார்ப்புடனும் செயல்படாதது வருந்தத்தக்கது.

பாதுகாப்புத் துறையும் உள்துறையும் இனியேனும் விழித்துக் கொண்டு பிரதமரின் சமாதான முயற்சிக்கு வலிமை சேர்க்கட்டும்.

இந்தியா விரிந்து, பரந்த நாடு. அதர்ம யுத்தங்களில் ஈடுபடுவோரை ராணுவ பலத்தால் மட்டும் எதிர்கொள்ள முடியாது. இந்தோ-பாக். இணக்கத்துக்கான பாதை அபாயமான வளைவுகளை உள்ளடக்கியது. நல்லெண்ணத்துடன் விழிப்புணர்வும் ஆற்றலுடன் சாணக்கிய மும் இணைந்து நடந்தாலன்றி முன்னேற முடியாது. ○

**சோ**பூரா ஷெராட்டன் நட்சத்திர ஓட்டலுக்குப் பின்புறம் உள்ள ரஷ்ய கலாசார மையத்தில் ஒரு செஸ் கிளப் இயங்கி வருகிறது. இருபத்திரண்டு வருடங்களுக்கு முன்பு ஒரு மூன்றாம் வகுப்பு பையன், தன் வீட்டு வேலைக்காரரை அழைத்துக் கொண்டு, அந்த செஸ் கிளப்புக்கு வந்தான். கிளப்பின் பொறுப்பாளர் கேசவன், "என்ன வேண்டும் உனக்கு?" என்று கேட்டபோது, "நான் இங்கே மெம்பராகி, செஸ் விளையாட வேண்டும்" என்றான். உடன் வந்தவர், "இங்கே உறுப்பினராக வயது வரம்பு ஏதாவது உண்டா?" என்று கேட்டபோது, "குறைந்த பட்ச வயது வரம்பு ஏதுமில்லை. எவரும் மெம்பராகலாம்" என்றார் கேசவன்.

உடனே அந்தச் சிறுவன், தன் பாக்கெட்டுக்குள் கைவிட்டு, ஐந்து ரூபாயை எடுத்து நீட்டினான். "நான் மெம்பர் ஆக விரும்புகிறேன்" என்றான். மெம்பர் ஆனான்.

ஒவ்வொரு வாரமும் ஞாயிறு, திங்கள், வியாழன் என்றால், அந்தச் சிறுவனை செஸ் கிளப்பில் தவறாமல் பார்க்கலாம். அந்த கிளப்பில் நூற்றுக்கும் அதிகமான உறுப்பினர்கள் இருந்தாலும், போதிய இடவசதி கிடையாது. குறைந்த எண்ணிக்கையில்தான் செஸ் டேபில்கள் இருந்தன. எனவே, ஒரு மரபு கடைபிடிக்கப்பட்டு வந்தது. இரண்டு பேர் ஆடுகிறார்கள் என்றால், அதில் யார் தோற்கிறாரோ, அவர் எழுந்திருந்து, காத்துக் கொண்டிருக்கும் இன்னொரு மெம்பருக்கு ஆட வாய்ப்பு தர வேண்டும். ஜெயித்தவரும், புதியவரும் ஆடுவார்கள். அந்த ஆட்டத்தில் தோற்பவர் இடத்தை காலி பண்ண, ஜெயித்தவரும், இன்னொரு புதியவரும் அடுத்த ஆட்டத்தை ஆரம்பிப்பார்கள்.

கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்ட அந்த சுட்டிப் பையன், ரெகுலராக வர ஆரம்பித்தபின், கிளப்பில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. அந்தச் சுட்டிப் பையன் பர்மனென்டாக ஒரு பக்கம் உட்கார்ந்து கொண்டு அடுத்தடுத்த ஆட்டம் ஆடிக் கொண்டே இருக்க, எதிரில் உட்கார்ந்து ஆடுகிறவர்கள் அனைவரும் தோல்வியையே தழுவிக் கொண்டிருந்தார்கள். மாலையில் வந்து ஆட ஆரம்பித்தால், ஒரு ரவுண்டு அனைவரையும் தோற்கடித்துவிட்டு அந்தப் பையன் வீட்டுக்குப்புறப்பட இரவு எட்டரை, ஒன்பதுமணி ஆகிவிடும்.

அந்த சுட்டிப் பையன்தான் இன்றைய உலக செஸ் சாம்பியன் விஸ்வநாதன்



# வென்றது இளமை!



ஆனந்த். லேட்டஸ்டாக ஆனந்த், டெக்ரான் நகரில் நடைபெற்ற உலக செஸ் சாம்பியன் ஷிப் போட்டியில் பெற்ற அபார வெற்றி, புத்தாயிரம் ஆண்டில் இந்தியாவுக்குக் கிடைத்துள்ள இமாலயப் பெருமை என்று குறிப்பிடப் படுகிறது.

ஐஸ்வர்யா ராய்களும், ப்ரியங்கா சோப்ராக்களும் தங்களுடைய அழகால் கிரீடம் பெற்று இந்தியாவுக்குப் பெருமை தேடிக் கொடுக்கிறார்கள் என்றால், விஸ்வநாதன் ஆனந்த் தன் மூளையால் இந்தியாவுக்கு உலக செஸ் சாம்பியன்ஷிப் பட்டத்தை வென்று, கௌரவம் கிடைக்கச் செய்துள்ளார்.

ஆனந்த் உலக சாம்பியன்ஷிப் பட்டம் வென்ற தினம், சென்னையில் ஒரு இளைஞர் அணிந்திருந்த டீ ஷர்ட் வாசகம் இது: விஷி! என்னுடைய காரில் "ஐ லவ் இந்தியா!" என்று பெருமையுடன் ஸ்டிக்கர் ஒட்டிக் கொள்ள வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது.

இன்று இந்தியாவில் தகவல் தொழில் நுட்பப் புரட்சி நடைபெற்றுக் கொண்டிருக் கிறது. இந்திய கம்ப்யூட்டர் வல்லுனர்களுக்கு உலகமெங்கும் நல்ல கிராக்கி! ஆனால், இந்த சாஃப்ட்வேர் புரட்சிக்கு மத்தியில் ஆனந்த் தனது கூர்மையான அறிவால், உலக அரங்கில் ஒரு அறிவுப் புரட்சி செய்திருக் கிறார். அதையும் முப்பத்தியோரு வயதில் சாதித்திருக்கிறார் என்பது அனைவருக்கும் மகிழ்ச்சியான விஷயம்! இளமைக்குக் கிடைத்த வெற்றி!

"என்னைப் போன்ற இளைய தலைமுறை செஸ் ஆட்டக்காரர்களுக்கு, ஆனந்தின் இந்த பெரும்வெற்றி, உற்சாகத்தையும், ஊக்கத்தையும் அளிக்கிறது. அவர் நம் ஊர்க்காரர் என்பதால் எனக்கு இரட்டை மகிழ்ச்சி" என்று சந்தோஷம் பொங்கக் குறிப்பிடு கிறார் செஸ் வீராங்கனை விஜய லட்சுமி. புதிய மில்லெனியத்தில் இந்திய விளையாட்டுத்துறைக்குக் கிடைத்த பரிசு என்று குறிப்பிடுகிறார் பி.டி.உஷா.

"ஆனந்த் இந்த அளவுக்கு அகில உலக அளவில் பேரும் புகழும் பெறுவார் என்று அவருடைய சிறுவயதிலேயே உங்களால் கணிக்க முடிந்ததா?" என்று ஆனந்தின் தந்தை விஸ்வநாதனிடம் கேட்டபோது, "ஆரம்பப் பள்ளிக்கூட நாட்களிலிருந்தே ஆனந்துக்குச் செஸ் விளையாட்டில் நிறைய ஆர்வம் இருந்தது. ஆனால் 84ம் ஆண்டு, தேசிய அளவில் சப் ஜூனியர் பிரிவில்

**செஸ் சம்பந்தப்பட்ட புத்தகங்கள் ரஷ்ய மொழியில் இருந்தன என்பதால், முப்பது நாளில் ரஷ்ய மொழி கற்றுத்தரும் புத்தகத்தை வாங்கி, தாமாகவே ரஷ்ய மொழி கற்றுக் கொண்டு, அந்த மொழி செஸ் புத்தகங்களைப் படித்து, தமது ஆற்றலை வளர்த்துக் கொண்டவர் ஆனந்த்.**



ஆனந்த் அமோக வெற்றி பெற்றபோது இவனுக்கு நல்ல எதிர்காலம் இருக்கப்போகிறது; இவன் பல சாதனைகளைப் புரிவான் என்ற நம்பிக்கை எங்களுக்கு ஏற்பட்டது'' என்கிறார்.

ஆனந்துக்குச் சிறு வயதில் செஸ்ஸில் ஆர்வம் ஊட்டியவர் அவரது அம்மா சுசீலா. ஆனந்துக்கும் அவருடைய அண்ணன் மற்றும் அக்காவுக்கும் நிறைய வயசு வித்தியாசம். (சுமார் பன்னிரண்டு வருடம்). எனவே பிறந்தது முதலே வீட்டின் செல்லப்பிள்ளை ஆனந்த். "அம்மாதான் ஆனந்துக்கு செஸ் ஆடக் கற்றுக் கொடுத்தவர். வீட்டில் அவருடைய சக ஆட்டக்காரரே அம்மாதான். இப்போதுகூட, ஆனந்தின் செஸ் திறமை பற்றி அவரது அம்மா பெருமையாக ஏதாவது சொன்னால், 'இந்த சாம்பியனையும், 82ம் ஆண்டுவரை எத்தனைமுறை நீங்கள் தோற்கடித்திருக்கிறீர்கள்?' என்று தமாஷாகக் கேட்பாராம் ஆனந்த்.

"போட்டிகளில் ஆனந்த் பங்கேற்கிறபோது, உங்கள் மனநிலை எப்படி....?'' என்று ஆனந்தின் பெற்றோர்களைக் கேட்டால், "சில வருடங்களுக்கு முன்பு வரை வெளிநாடுகளுக்கு முக்கிய போட்டிகளில் பங்கேற்கிறபோது முடிவு என்ன என்பதை மறுநாள் நியூஸ் பேப்பர் படித்துத்தான் தெரிந்து கொள்ள முடியும். எனவே "என்ன ஆச்சோ? என்ன ஆச்சோ?'' என்ற சஸ்பென்ஸ் டென்ஷனை ஏற்படுத்துவது வழக்கம். ஆனால் இப்போதெல்லாம், இன்டர்நெட் வழியாக, ஆனந்த் கலந்து கொள்ளும் போட்டிகளை நாங்கள் நேரடியாகவே பார்க்க முடிகிறது. இது ஒரு அனுகூலம் என்றாலும், இதன் காரணமாகவே, நேரம் ஆக ஆக, ஆனந்த் ஜெயிக்க வேண்டுமே என்று மனம் ஏங்கத் தொடங்கிவிடும். பிரார்த்தனை... பிரார்த்தனை... பிரார்த்தனைதான். எங்கள் பிரார்த்தனையும், அவனது தன்னம்பிக்கையும் யாருடன் மோதினாலும் அவனை ஜெயிக்க வைத்து விடும் என்பது எங்களுடைய நம்பிக்கை.''

FIDE என்கிற அகில உலக செஸ் அமைப்பு நடத்திய போட்டியில் வென்று தான் இந்த சாம்பியன்ஷிப் பட்டம் பெற்றிருக்கிறார் ஆனந்த்! உலகில் இந்த விருது பெறும் முதல் ஆசியர் இவர்தான். ஆனந்த் சுத்த சைவம் என்பதால், இந்த விருது பெறும் உலகின் முதல் வெஜிடேரியன் என்றும் இவரைக் குறிப்பிடுகிறார்கள்!

சிறுவயதில், ரஷ்ய கலாசார மைய செஸ் கிளப்பின் லைப்ரரியில், பல செஸ் சம்பந்தப்பட்ட புத்தகங்கள் ரஷ்ய மொழியில் இருந்தன என்பதால், முப்பது நாளில் ரஷ்ய மொழி கற்றுத்தரும் புத்தகத்தை வாங்கி, தாமாகவே ரஷ்ய மொழி கற்றுக் கொண்டு, அந்த மொழி செஸ் புத்தகங்களைப் படித்து, தமது ஆற்றலை வளர்த்துக் கொண்டவர் ஆனந்த். அவர், போட்டிகள் இல்லையென்றால், பெரும்பாலும் தங்கியிருப்பது ஸ்பெயின் நாட்டில்தான். ஸ்பெயின் நாட்டு செஸ் வீரர்கள் பலர், ஆனந்தை 'அரை ஸ்பெயின்காரர்' என்று சொல்லுகிறார்களாம்.

ஆனந்தின் வெற்றிக்குப் பின்புலமாக இருப்பவர் அவரது மனைவி அருணா. ஆனந்த் பங்கு பெறும் ஒவ்வொரு போட்டியின்போதும், அவர் ஜெயித்தாரா? இல்லையா? என்று பார்க்காமல், தவறாமல் ஏதாவது பரிசு கொடுப்பது அருணாவின் வழக்கம். ஜெயித்தால் பாராட்டிப் பரிசு. ஜெயிக்காவிட்டால், 'மனச் சோர்வு வேண்டாம்' என்று உற்சாகப்படுத்தப் பரிசு! ஆனால் இப்போதெல்லாம் ஆனந்த் தோற்பதில்லையே!

**— எஸ். சந்திரமௌளி**

அட்டை வண்ணப்படங்கள்: **யோகா**

அடுத்த இதழ்

இரண்டு புத்தகங்கள்

# இளமைச் சிறப்பிதழ்

## "மனைவி முன் நடிக்க மாட்டேன்!"

- விஜய் பர்சனல் பேட்டி

## மூடுபனி நிலவு

- ராஜேஷ்குமார் எழுதும் திக்...திக்... தொடர்!

## சென்னை டு சைனா

- சாருகேசி எழுதும் பயணத்தொடர்



## காலேஜ் டூவீலர்கள்

- ஒரு ஃபோட்டோ ஃபீச்சர்

கம்ப்யூட்டர் மாணவர்கள் எந்த கோர்ஸ் படிக்க வேண்டும்?

– சாஃப்ட்வேர் வல்லுனர்களின் அலசல்



● டீன் – ஏஜ் ஜாயிண்ட்ஸ்

– ஒரு ஜஸ்தி விசிட்





'டிரிம்' ஆக இருப்பது எப்படி?

– வந்தனா லூத்ராவின் ஸ்லிம்மிங் உத்திகள்

டாப் ஃபாஷன்ஸ்

# ரிமோட்

• சுதாரகுநாதன்



அதிகம் கேட்டது கொஞ்சம்தான். 'ஹலோ! நான் கொத்தனாம்பட்டி குப்புசாமி பேசறேங்க. எனக்கு அந்தப் பாட்டு ரொம்ப பிடிக்குங்க. அதைப் போடறீங்களா?' என்ற ரகமான நேயர் விருப்பங்களுக்குப் பதிலாக, இந்த டெலிபோன் பேட்டியில் மெய்யான சந்தேகங்களும் தெளிவான பதில்களும் கிடைத்தன. சந்தோஷமான விஷயம். பேரா சிரியை என்.லலிதா, அன்பும் அறிவும் கலந்த யோசனைகளை வழங்கினார். (கூடவே கல்வியாளர் பி. அனு ராதாவும்)

ஒரு தந்தை, 'என் பையன்



சிஷ்யன் என்பதற்குப் பெண்பால் சிஷ்யை. கரெக்ட். சீடன் என்பதற்குப் பெண்பால் சீடை. அதுவும் கரெக்ட்தான். என்றாலும், விஜய் டீவியின் 'மார்கழி மகோற்சவ'த்தில், சுதா ரகுநாதனின் பயோ டேட்டாவை எழுதிய ஆர்வலர், இவர் 'எம்.எல். வசந்தகுமாரியின் சீடை' என்று குறிப்பிட்டிருந்தது என்னவோ போலிருந்தது. Some smart alec!

'எம்.எல்.வி.க்குப் பல சீடைகள் உண்டு. அந்த சீடைகளுக்கு இன்று சீடைகள் இருக் கிறார்கள். சுதாவுக்கும் ஒரு சீடை...' - நல்ல காலமாக விஜய் டீ.வி.யில் இப்படியெல்லாம் போடவில்லை!

Education commences at the mother's knee என்று சொல்வதுண்டு. எனவே, 'பொதிகை' யில் குழந்தைகளின் வளர்ப்பு, படிப்பு சம்பந்தமான கேள்விகளைத் தாய்மார்களே

ஸ்போர்ட்ஸ்லே அதிக ஈடுபாடு காட்டு கிறான்' என்று வருத்தப்பட்டபோது, 'அப் படி ஈடுபாடு இருப்பதும் நல்லதுதான். குழந்தைகளின் ஸ்போர்ட்ஸ் ஆர்வத்துக்குத் தடை போடுவதால்தான் நம் நாடு அந்தத் துறையில் மிகவும் பின் தங்கியிருக்கிறது என்றார் பேராசிரியை.

மெல்லிய நகைச்சுவையும் இவருடைய பதில்களில் இழையோடியது. ஒரு தாய், 'என் பெண் படிக்கிறதேயில்லை. எப்ப பார்த் தாலும் தூங்கறா' என்றார். 'எப்பப் பார்த் தாலும் தூங்குகிறாள் என்றால் நீங்கள் ருசி ருசியாய்ச் சமைத்து அவளுக்கு வயிறு நிறை யப் போடறீங்களோ என்னவோ. அதை மாற்றிக் கொள்ளுங்கள்' என்றார் பேராசிரியை.

# சுதா ரகுநாதனுக்கு ஒரு சீண்டை!

மேற்படி அறிவுரையை அந்தத் தாய் ரொம்பத் தீவிரமாய்க் கடைபிடித்து மகளை எலும்பும் தோலுமாய்ப் பண்ணிவிடுவாரோ என்று பயமாயிருக்கிறது. Heaven forbid.

**ரா**ஜ் டீவியில் 'ஊர் வம்பு' வள வளக்கும் ரேவதியும் லக்ஷ்மியும் ('அந்த' ரேவதி, 'அந்த' லக்ஷ்மி அல்ல) எல்லார் மண்டையையும் உருட்டுகிறார்கள். அரசியல் விவகாரம் என்றால் மட்டும் they get cold feet முள்ளிலே சேலைபடாமல் ஒதுங்கி விடுகிறார்கள். இடையிலே வம்பில்லாத வேறு தகவல்களும் வருகின்றன. உதாரணமாக-

**ரேவதி** : ராத்திரி ரொம்ப நேரம் கண் விழிச்சு வாசல்லே கோலம் போட்டேன். அதான் காலையிலே எழுந்திருக்க நேரமாயிட்டுது.

**லக்ஷ்மி** : உனக்குத் தெரியாதா? இந்த ரெண்டு மாசமும் விடியற் காலையிலே, ஓஸோன்னு சொல்றாங்களே, அந்த வாயுப் படலம் பூமிக்குக்கிட்டே இறங்கி வருது. உடம்பிலே அது பட்டால் நல்லதுன்னுதான் காலையில் வாசல்லே கோலம் போடணும்னு பெரியவங்க சொல்லியிருக்காங்க.

ஆகவே, மார்கழி பஜனைக் காரர்களே. கம்பளிக் குல்லா, மஃப்ளர், ஸ்வெட்டர், சால்வை முதலானவற்றை உடனே துறப்பீர்களாக.

**அ**மெரிக்க நாவலாசிரியை டோரத்தி பார்க்கரிடம், 'ஆங்கில மொழியிலேயே மிக அழகான இரண்டு சொல் எது?' என்று கேட்டார்கள். 'cheque, enclosed' என்று பதிலளித்தார் அவர்.

அதுபோல, கல்யாணத்துக்குப் பெண்ணை (அல்லது பிள்ளையை) வைத்திருக்கும் பெற்றோர்களிடம், 'மிக ஆனந்தமான ஒரே ஒரு சொல் எது?' என்று கேளுங்கள். 'சம்மதம்' என்ற வார்த்தைதான் என்பார்கள். அந்தச் சொல்லைப் பெறுவதற்கு உதவி செய்கிறது ஸன் டீவியில் வந்து கொண்டிருக்கும் 'கல்யாண மாலை'. வெறும் தரகு மாதிரி அமைந்துவிடாமல் சற்றுச் சுவாரஸ்யமான அம்சங்களும் இதில் இருக்கின்றன. 'எனக்குக் கணவராக வருகிறவர் பென்ஷன் வாங்கக் கூடிய கவர்மெண்ட் வேலையில் இருக்க வேண்டும்' என்றார் ஒரு பெண். (என்ன தீர்க்க தரிசனம்!) 'நான் ஒரு விதவையை அல்லது விவாகரத்தான பெண்ணை மணக்க விரும்புகிறேன். இப்படிச் சொல்வதால் என்னிடம் ஏதோ குறை இருப்பதாக எண்ணி விட வேண்டாம். எந்தக் குறையும் கிடையாது' என்றார் ஒரு இளைஞர். 'உங்கள் விருப்பம் நிறைவேறட்டும்' என்று அவ்வப்போது ஆசீர்வாதம் செய்தார் பிரமிட் மோகன்.

நிகழ்ச்சியை ஒட்டிப் பட்டி மன்றங்களும் நடைபெறுகின்றன. எஸ்.வி.சேகரை நடுவராகக் கொண்டு ஒன்று நடந்தது. தலைப்பு 'மனைவியிடம் கணவனும், கணவனிடம் மனைவியும் தங்கள் ரகசியங்களை ஒப்பிக்க வேண்டுமா அல்லது ஒளிக்க வேண்டுமா?' (என்ன பயங்கரமான தலைப்பு!) 'இவ்வளவு சீரியஸான பிரச்னைக்கு ஒரு காமெடி நடிகர் நடுவராக இருக்கலாமா?' என்று கேட்டுவிடாதீர்கள். அப்படி ஒரு பெண் கேட்கப் போய், 'இது கோர்ட்டை அவமதித்தக் குற்றமாகும்!' என்று கர்ஜித்தார் சேகர்.

உண்மையில் அன்று ஜோக் சொன்ன சிரிப்பு சேகரை விட, தத்துவங்கள் உதிர்த்த சீரியஸ் சேகரையே அதிகம் காண முடிந்தது. அதை வெற்றிகரமாகவே செய்தார். Success comes in cans, not in can'ts.



# வியர்வைத் துளிகளுக்கு விழா எடுப்போம்

அமைப்பு சாரா தொழில்களுக்கான நல வாரியங்களி
பதிவு செய்வீர்! பயன் பெறுவீர்!!

- ★ விபத்தில் உயிரிழப்போர்க்கு ஒரு இலட்சம் ரூபாய்
- ★ மகப்பேறு நிதியுதவி ஆயிரம் ரூபாய்
- ★ பணிமுடிப்பு நலன் : கட்டிய தொகைக்கு 12% கூட்டு வட்டியுடன் 25% பணிக்கொடையும் 60 வயது முடிவடையும்பொழுது வழங்கப்படும்.

தொழிலாளர் நலத்துறை





# வியர்வை சிந்துவோர்தம் கண்ணீர்துடைக்கும் கலைஞர் அரசு

## வியர்வைத் துளிகளுக்கு விழா எடுப்போம்

IPR/DIS/2000/ENTHRALL 2138

அரசியல் கட்சிகளில் தங்களை இணைத்துக் கொள்பவர்கள் பலவகை. தொண்டுள்ளத்தோடும் தியாக உணர்வோடும் மக்களுக்காகத் தங்களை முழுமையாக அர்ப்பணிப்பவர்கள் ஒருவகை. சமுதாய அந்தஸ்து கிடைக்க வேண்டும் என்று அரசியலில் வருபவர்கள் ஒரு வகை. கொள்கை பிடிப்புள்ளவர்கள், கொள்கையைச் சுயநலத்துக்காகப் பயன்படுத்துபவர்கள், சுயநலத்தை மட்டுமே சுமந்து செல்பவர்கள் இப்படிப் பல வகைகள். ஒரு தலைவர் வழி நடந்து, அவர் இயற்கை எய்திவிட்ட பிறகு அவரது வழி நடப்பதாகச் சொல்லி தலைமையை ஏற்பவர்கள், சாதகமான நிலைமைகள் வரும்போது அவரது பெயரைச் சொல்லியும், பாதகமான நிலை வரும்போது கொள்கைத் தடுமாற்றங்கள் ஏற்பட்டு நழுவிப் போவதும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இந்த வகையில் பார்க்கும்போது, பாரம்பரியம் உள்ள காங்கிரஸ் கட்சியும், பொதுவுடைமை இயக்கங்களும் அவற்றின் மூலகருத்தாக உள்ள கொள்கைகளை மாற்றியும் கட்சிகளை நடத்தி வருவதைக் காண்கிறோம். அதேபோல் திராவிட இயக்கத்தில் அண்ணாவுக்குப் பிறகு தலைமை ஏற்றவர்கள் சந்தர்ப்ப சூழ்நிலையால் தங்களுக்குச் சாதகமான நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டிருப்பதை மறுப்பதற்கு இல்லை. அதே போலத்தான் அ.இ.அ.தி.மு.க.வும் எம்.ஜி.ஆருக்குப் பிறகு தடுமாறியது. அப்படித் தடுமாறியபோது எங்களைப் போன்றவர்கள் இயக்கத்தைக் காப்பாற்றும் நடவடிக்கையில் ஈடுபட்டது உண்டு. அந்த நேரத்தில் பதவியைப் பெற வேண்டும் என்று சுயநலத்துடன் சிலர் செயல்பட்டதும் உண்டு. எம்.ஜி.ஆர் பெயரைப் பயன்படுத்தி இன்று பல இயக்கங்கள் நடந்துகொண்டிருக்கின்றன.

எம்.ஜி.ஆர் கட்சித் துவங்கக் காரணமாக இருந்த சூழ்நிலை தமிழ்நாட்டு மக்களுக்கு நன்கு தெரியும். ஆனால் எம்.ஜி.ஆர் பெயரை இயக்கத்துக்குப் பயன்படுத்துபவர்கள் அந்தச் சூழ்நிலையை மறந்து விட்டார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது. எம்.ஜி.ஆரோடு ஒன்றாக இணைந்து செயல்பட்டவர்கள், தற்போது தனித் தனியாக செயல்படுகின்ற நிலையில் அவர்கள் மீண்டும் இணைய வேண்டுமானால், அவர் எதற்காக கட்சியைத் துவங்கினாரோ அந்த அடிப்படையை மறக்காமல் இருக்க வேண்டும். இந்த அடிப்படையில் அவர்களை



அழைப்பதற்கு எங்களுக்கு விசாலமான மனது உண்டு. எம்.ஜி.ஆருடைய தொண்டர்கள் மீண்டும் ஒருங்கிணைந்து அவரது கொள்கைகளை எந்தவித சுயநலமுமில்லாமல் செயல்படுத்த முன் வருவார்களேயானால் புரட்சித்தலைவர்

**எஸ்.டி. சோமசுந்தரம்**
பொதுச்செயலாளர்,
புரட்சித்தலைவர் அண்ணா தி.மு.க.

# மகிழ்வித்து மகிழுங்கள்.

அன்புள்ளம் கொண்ட அம்மாவுக்கு மகள் எழுதும் கடிதம்

பள்ளிக்கூடம் சேர்க்கணும்னு பாத்திரத்தை வித்தீங்களே,
எந்த பானையில் சமைக்கிறீங்கனு எழுதுங்க

அன்புள்ளம் கொண்ட அம்மாவுக்கு
மகள் எழுதும் கடிதம்.
ஏதோ நானும் இருக்கிறேன்
உருப்படியா படிக்கிறேன்.
யாரும் இல்லாத நமக்கு மட்டும் எப்படி
கஷ்டம் பாருங்கம்மா.
பள்ளிக்கூடம் சேர்க்கணும்னு
பாத்திரத்தை வித்தீங்களே
எந்த பானையில் சமைக்கிறீங்க
எழுதுங்க.
கிழிஞ்ச சட்டை காரியின்னு
கிண்டலுந்தான் பண்றாங்க.
புத்தக நோட்டு வாங்கலேன்னு
கேட்கிறாரு வாத்தியாரு.
வாங்கிக்கொடுத்த பேனா உடைஞ்சி
இரவ வாங்கி எழுதுறேன்.

வேலை செய்யற வீட்டில இன்னும்
கூலி கொடுக்கலையா.
மறக்காமல் இதெல்லாம்
வாங்கிட்டு வாங்கம்மா.
மேலண்ட செவுத்தோரம்
ஒதுங்கித்தான் போகாதீங்க,
கருநாகம் குடியிருக்கு தெரியுமா.
பாத்திரம் தேச்ச கையெல்லாம்
காயமுன்னு சொன்னாங்க
மறக்காம மருந்து வாங்கி
போடுங்க. இப்படிக்கு உங்கள்
அன்பு மகள் – கோடீஸ்வரி.

1996 சங்கராந்தித்திருநாளில் ஸ்ரீ சங்கராச்சாரியார்கள் குருகுலம் எலக்ட்ரானிக்ஸ் தயாரிப்பான குரோனோஸ் டைமரை வெளியிட்டு ஆசீர்வதிக்கிறார்கள்

குருகுலத்திற்கு மேதகு ஜனாதிபதி
தேசிய விருது அளிக்கிறார் . 14.4.2000

பேரன்புடையீர்.

புத்தாண்டு, பொங்கல் வாழ்த்துக்கள்!

கடை கோடி கிராமப்புறத்தில் காந்தியச் செம்மல் வேதாரண்யம் உப்பு சத்யாகிரஹ தியாகி சர்தார் வேதரத்னம் அவர்களும் அவர்தம் ஒரே மைந்தர் பத்மஸ்ரீ வே. அப்பாகுட்டி அவர்களும் இந்திய சுதந்திரத்திற்கு முன்பே (1946) தொடங்கிய மகளிர் தொண்டு நிறுவனமான கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் என்ற எளிய சமுதாயத்தில் வாழும் ஆயிரக்கணக்கான பெண் குழந்தைகள் சார்பில் இந்த வேண்டுகோளை வைக்கிறோம்.

பெருந்தலைவர்களான, பாரத ரத்தினங்கள் பூஜ்ய விநோபாபாவே தொடங்கி வைத்த கோசாலை, ராஜாஜி தொடங்கி வைத்த அன்னபூர்ணாலயம், முதல் பார்லிமெண்ட் சபா நாயகர் ஜி. வி. மாவ்லங்கர் தொடங்கி வைத்த கலைமகள் நிலையம், சி. சுப்ரமண்யம் அவர்கள் தொடங்கி வைத்த நசிகேத நிவாஸ், காமராஜ், ஆர். வெங்கட்ராமன் ஆகியோர் தொடங்கி வைத்த குடிநீர் திட்டம் ஆகியவற்றை பெற்று அவர்கள் நல் ஆசியுடன் காந்திய வழியில் வாழ பயிற்சி எடுக்கிறோம்.

கல்வி பயிலும் ஏழை எளிய ஏதிலிச் சிறுமியருக்கு உதவுங்கள் . கிராமப்புற சிறுமியருக்கு இலவச உணவு , உடை, இருப்பிடம், கல்வி, பதினொறு தொழிற்பயிற்சிகள் ஆகியன தந்து 54 ஆண்டுகளாக ஆதரிக்கும் தேசிய விருது பெற்ற குருகுலம் மகளிர் தொண்டு நிறுவனத்திற்கு ஆதரவு தாருங்கள். நன்கொடைகளைப் பொருளாகவோ தொகையாகவோ அனுப்பி உதவுங்கள்.

## புத்தாண்டு, பொங்கல் நல்வாழ்த்துக்கள்

| | | |
|---|---|---|
| ராஜாஜி திறந்து வைத்த அணையா அடுப்பு நமது அன்னபூர்ணாலயத்தின் ஒரு நாள் உணவுச் செலவு (4 வேளைகள்) (600 பேர்) | ரூ. | 12,000/= |
| ஒரு மாணவிக்கு ஒரு ஆண்டிற்கு (உணவு, உடை, கல்வி) செலவு | ரூ. | 6,000/= |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 3,60,000/= |
| ஒரு மாணவிக்கு ஒரு ஆண்டிற்கு ஆகும் பராமரிப்பு செலவை வைப்பு நிதியாக வைத்து வட்டி மூலம் தொடர்ந்து ஏற்று ஆதரிப்பதற்கு | ரூ. | 60,000/= |
| சுமார் 50 பசுக்களை ஒரு நாள் பராமரிக்க செலவு | ரூ. | 1,500/= |
| பாண்டிச்சேரி ரோட்டேரியன் அன்பர் நன்கொடையாக அளித்த ரூ. 6 லட்சம் மின்சாரப்பல் செய்யும் இயந்திரங்களில் பயிற்சி தொடங்கிட | ரூ. | 1,50,000/= |

நிறுவனர்
அமரர். சர்தார்.
**வேதரத்னம்**
தபால்தலை

எவ்வளவு சிறிய தொகையானாலும் ஏற்றுக் கொள்கிறோம்.
நன்கொடைகளுக்கு 80 G வருமான வரிவிலக்கு பெறலாம்.

அரசு சலுகை: உள்ளாட்சி, கதர், அனைத்து அரசு நிறுவனங்கள், திருக்கோயில்கள், கல்வி நிலையங்கள் விலைப்புள்ளி கோராமல் குருகுல அச்சகத்திற்கும், குருகுல எலக்ட்ரானிக்ஸ்க்கும் வேலை கொடுக்கலாம். விற்பனை வரி கிடையாது. வெளிநாட்டு நன்கொடை பெற மத்திய அரசு அனுமதி எண் (FCRA) 075960069

( அறநிலையம் நடத்தும் பயிற்சிகளுக்கு வேலை கொடுத்தால் குப்த தானம் எனும் மறைமுக தானம் செய்தவர்களாவீர்கள். )

முகவரி: கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் தேசிய விருது பெற்ற மகளிர் தொண்டு நிறுவனம்,
த.பெ.எண். 2. வேதாரண்யம் - 614 810. நாகப்பட்டினம் மாவட்டம்.
போன் : ( 04369 ) 50227, 50027, 50011 தந்தி : *GURUKULAM. VEDARANIAM - 614 810.*

# கொடுத்தால் வரும்.

# மக்கள் நடத்தும் நூலகங்கள்!

"இறந்தபிறகும் என் விழிகளை மூடி விடாதீர்கள். அவை எப்போதும் படிப்பதற்குத் தேவைப்படலாம். எனது மரணத்தைப் பார்க்கவும் புரிந்து கொள்ளவும் கூட அவை பயன்படும்'' என்று சிலி நாட்டில் பிறந்த உலகப் பெருங்கவிஞன் பாப்லோ நெருடா கூறினான்.

இன்றளவும் இந்தியக் கல்வி முறையோடு இணைத்துப் பேசப்படுகிற மெக்காலேயின் வரலாற்றை எழுதிய டிரேவாலியன், அவர் ஒரு வாக்கியம் எழுத இருபது நூல்கள் படித்தார் என்றும் ஒரு வர்ணனை செய்ய இருபது கல் பயணம் செய்தார் என்றும் குறிப்பிடுகிறார்.

ஊழி முடிவில் தன்னந்தனியனாக இருக்கும் சூழ்நிலையில் இறைவன் அத் தனிமையைப் போக்கித் தருந்த துணையாக, மாணிக்கவாசகரின் திருவாசகத்தைத் தன் கைப்படப் பிரதி எடுத்து வைத்துக் கொண்டான் என்று மனோன்மணியம் சுந்தரனார் பாடுகிறார்.

புத்தகக் கண்காட்சிகள் தமிழகமெங்கும் நடக்கும் சீசன் இது. வாசிப்பு பழக்கம் குறித்து கவிஞர் தமிழன்பன் பிபிஸி தமிழோசையில் ஆற்றிய உரையின் அடிப்படையிலான சிந்தனைகள்.

படிப்பின் தேவையை இப்பின்னணியில் பார்த்தால் படிக்கும் பழக்கம் மக்களுக்கு எல்லா வகைகளிலும் வாழ்க்கையில் கை கொடுக்கக்கூடியது என்பதை உணரலாம். பொழுது போக்க பயன்படுவது மட்டுமில்லை வாசிப்புப் பழக்கம், வேலை வாய்ப்புக்கு, பதவி உயர்வுக்கு, பொது அறிவு வளர்ச்சிக்கு, கல்விக்கு, மனமாற்றத்திற்கு, ஆய்வுகளுக்கு, கண்டு பிடிப்புகள் செய்வதற்கு, உலக நடைமுறைகள் அறிவதற்கு, வணிகம், சந்தை நிலைகளை அறிவதற்கு என எல்லா வகைகளிலும் புத்தக வாசிப்பு நிச்சயம் தேவை. ஐ.நா.சபை, தகுதி வாய்ந்த குடிமகனாக விளங்க, ஒருவன் ஓர் ஆண்டில் ஏறத்தாழ இரண்டாயிரம் பக்கங்கள் வாசிப்பவனாக இருக்க வேண்டும் என்று



ஒரு வரையறை செய்கிறது.

இந்திய வாசிப்பு முப்பத்திரண்டு பக்கங்களைத் தாண்ட முடியாமல், கண்ணீர் சிந்திக் கொண்டிருக்கிறது.

'பட்டதாரிகளிடமே படிப்பு ஆசை பட்டுப் போய் வருகிறது' என்று தமிழகக் கல்வி அமைச்சர் தமது ஆழ்ந்த கவலையை அடிக்கடி தெரிவித்து வருகிறார். தமிழகத்தில் மாநில மைய நூலகம், மாவட்ட மைய நூலகங்கள், பேரூர்க் கிளை நூலகங்கள், சிற்றூர்ப் புற நூலகங்கள், இவற்றோடு தனியார் நிறுவனங்களில் - கல்வி நிலையங்களில், மருத்துவ நிலையங்களில், கோவில்களில் என நூலகங்கள் பலவாக உள்ளன. மக்கள் எண்ணிக்கையோடு கணக்கிட்டுப் பார்த்தால் - அரசு, நூலகங்களுக்கென வாங்கும் நூல்களின் எண்ணிக்கை போதாது. அமைத்துள்ள நூலகங்களின் எண்ணிக்கையும் போதாது; என்று குறைப்பட்டுக் கொள்ள வேண்டியிருப்பது போலவே, உள்ள நூலகங்களைப் பயன்படுத்திக் கொள்வோர் எண்ணிக்கை போதாது என்றும்தான் குறைப்பட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறது.

தமிழரிடம் படிக்கும் பழக்கம் குறைவு என்பதற்குச் சான்று சொல்கின்றன பின்வரும்

வரிகள். "நகரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட திரையரங்குகள் இருப்பதும், அவை ஒவ்வொன்றும் 12 மணி நேரம் இயங்குவதும், இடம் இல்லை என்ற அறிவிப்பும், அதே சமயம் நகர மைய நூலகம் தவிர ஏனைய நூலகங்கள் பகுதி நேரம் இயங்குவதும், நூலகங்களின் எண்ணிக்கைக் குறைவும், ஒருங்கே வைத்துச் சிந்திக்கத் தக்கன. குடும்பச் சூழல், சமூகச் சூழல் ஆகியவை ஏற்படுத்தியுள்ள அடர்த்தியான எதிர்மறை மூட்டத்தைக் கடந்து, நூல்வாசிப்பைச் சாத்தியமாக்குவது இன்றுள்ள தலைமையான பணி என்று உறுதிபடக் கூறலாம்.

வாசகர்களின் வாசிப்புக் குறைவுக்கான காரணங்களை ஒரு புள்ளி விவரம் மூலம் நாம் பார்த்தால், இந்த எதிர்மறை மூட்டத்தை உருவாக்கும் சக்திகளைப் புரிந்து கொள்ள முடியும்.

35 விழுக்காடு, வாசகர்களுக்கு வாசிப்புக் குறைவுக்கான காரணம் - தொலைக்காட்சி அலை வரிசைகள்.

35 விழுக்காடு - திரைப்பட விருப்பம்.

25 விழுக்காடு - வருவாய் போதாமை.

20 விழுக்காடு - நூல்களின் விலை உயர்வு.

15 விழுக்காடு - வாசிக்கும் சூழல் இன்மை.

10 விழுக்காடு - வாசிக்கும் தேவையின்மை.

0.8 விழுக்காடு - வாசிப்புக்குச் சமூக மதிப்பின்மை.

0.7 விழுக்காடு - காசுக்கு அலைவதே நோக்கமாகக் கொண்ட வாழ்க்கை.

கல்வி வளர்ச்சியோடு ஒத்திசைவாக வளர வேண்டிய வாசிப்புப் பழக்கத்தை இளம் பருவத்திலேயே தொடங்கிவிட வேண்டும்.






வளர்ந்த நாடுகளிலும் வளரும் நாடுகளிலும் - இதனை ஓர் இயக்கமாகவே நடத்துகின்றனர். அமெரிக்காவில் கிளின்டன், தமது தேர்தல் அறிக்கையில் முன் வைத்தவற்றுள் முக்கியமானது 'அமெரிக்கா வாசிக்கிறது' என்ற பல கோடி டாலர் செலவுள்ள பெருந்திட்டமாகும். அமெரிக்காவில் ஒரு குழந்தை விடுமுறைக் காலத்தில் ஐம்பது புத்தகங்கள் படித்ததாகப் பெற்றோர்கள் உறுதி செய்தாலே போதும் - அக்குழந்தைக்கு மிகச் சிறந்த அருங்காட்சியகத்தில் கட்டணம் கட்டாமல் சுற்றிப் பார்க்க அனுமதியும் - தரமான விடுதியில் தாராளமான விருந்தும் கிடைத்துவிடும். ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கைக்குமேல் நூல்கள் படித்த மாணவர்கள் எவ்வளவு பேராக இருந்தாலும் சரி - அவர்களுக்கெல்லாம் அந்நாட்டுத் தலைவரே கையெழுத்திட்டுப் பாராட்டிதழ் அனுப்புகிறார்.

நம்மில், பலருக்கு சார்ஜா என்றால் கிரிக்கெட் ஆட்டம் தான் நினைவுக்கு வரும். ஆனால் ஐக்கிய அரபு நாட்டில் வாசிப்புப் பழக்கத்தை

**தமிழன்பன்**

வளர்த்தெடுக்க - அந்நாட்டு பொது நூலகத் துறை சார்ஜா பரிசு வழங்கிவருவதை நம்மில் சிலரேனும் அறிந்திருப்போமா?

நூலக இலக்கியப் பரிசுகளை அந்நாடு வாரி வழங்கிவர, தகுதியான முறையில் இளைஞர்களிடையே நூலக இலக்கியப் போட்டிகளை - ஒவ்வோர் ஆண்டும் ஒரு மையப் பொருளைத் தேர்ந்தெடுத்து நடத்துகிறது.

வாசிப்பும் - சிந்தனை வளர்ச்சியோடும் படைப்புச் சிந்தனையோடும் அதன் தொடர்பும் படைப்பிலக்கியத்தில் வாசிப்பின் தாக்கம்.

கல்வி முன்னேற்றமும் அதில் வாசிப்பின் பங்கும்.

கற்கும் கலையிலும் சிந்தனைத்திறனிலும், வாசிப்பும், நூலகங்களும் பெறும் இடம்.

வாசிப்பை வளர்ப்பதில், போட்டிகளின் ஆராய்ச்சிகளின் பங்கு.

தனி வாசிப்பும், படைப்பாற்றலில் அதன் பங்கும்.

நூலகங்களில் பயன்படுத்தப்படும் நவீன தகவல் தொழில் நுட்பங்களும் - ஆக்கபூர்வமாக வாசகர்களின் சிந்தனைகளையும், படைப்பாற்றலையும் வளர்ப்பதில் அவற்றின் பங்கும்.

வாசிப்பதை, வளர்ந்த சிந்தனைச் செயல்பாடாக மாற்றுவது எப்படி?

வாசிப்பதன் வாயிலாகவும், நூலகங்கள் மூலமாகவும் - குழந்தைகள் வளர, பெற்றோர்கள் வெவ்வேறு வகைகளில் முயலலாம்.

- இப்படியெல்லாம் வாசிப்பு இயக்கத்தை நேசித்து வளர்க்க ஆயிரம் தளங்கள் இருக்கின்றன.

**ந**ம் அண்டை மாநிலமான கேரளத்தில் ஒரு நல்ல நூல் 5000 பிரதிகள் எடுத்த எடுப்பில் அச்சிடப்படுகின்றன. அங்கும் நூலக இயக்கம் வாசிப்புப் பழக்கத்திற்காகப் பல்வேறு வழிமுறைகளைக் கையாளுகிறது.

வீடுகளுக்கே புத்தகங்களைக் கொண்டு போய்க் கொடுத்து மக்களைப் படிக்கும்படி தூண்டுகிறது - அங்குள்ள நூலக இயக்கம். மக்கள் குழுக்கள் நூலக இயக்கத்தை முன்னெடுத்துச் செல்கிறது. அரசு, நூலகங்களுக்குப் பணம் மட்டுமே ஒதுக்குகிறது. மக்கள் குழுக்களே, நூலகங்களுக்குத் தேவையான நூல்களைத் தேர்வு செய்கின்றன. அங்கும், மாநில, மாவட்ட, வட்ட அளவுகளில் இம் மக்கள் குழுக்கள் செயல்படுகின்றன. வட்ட அளவுக் குழுவோடு இணைந்து ஊர் ஊர்க்கும் என வேர் பரப்பும் முறையில் நூலக இயக்கம் விரிந்துள்ளது. ஏறத்தாழ 5000 நூலகங்கள் - அங்கு தமக்கென நூற்றுக்கணக்கான உறுப்பினர்களைப் பெற்றுள்ளன.

படிப்புப் போட்டிகளை கேரள நூலக இயக்கம் பரந்துபட்ட முறையில் நடத்தி வருகிறது. பள்ளி அளவு, மாவட்ட அளவு, மாநில அளவு எனப் போட்டி எல்லைகள் வகுக்கப்பட்டு - அப்போட்டிகளுக்கு உரிய நூல்களும் முறையாக அறிவிக்கப்படுகின்றன. கல்லூரி மாணவர்களிடையே இப்போட்டிகளை நடத்தத் திட்டமிட்டிருக்கும் நிலையில் கேரள நூலக இயக்கம். பள்ளி முன் பருவ மாணவர்களுக்கெனக் குட்டி நூலகங்களை உருவாக்கித் தருகிறது.

தொலைக்காட்சி, வானொலி முதலிய ஊடகங்கள் வாயிலாகத் தொடர்ந்து வாசிப்புப் பழக்கத்திற்கு உறுதுணையாக இருப்பதோடு, நூலக இயக்கமே - நேர்காணல்கள், கருத்தரங்குகள், கதை, கவிதை வாசிப்புகள் என நிகழ்ச்சிகளைத் தோரணம் தோரணமாகத் தொகுத்து வழங்கி வருகிறது.

உலக நாடுகள் சிலவற்றில் தொலைக்காட்சி, வானொலி, நாளேடுகள் என்னும் பல்வகை ஊடகங்களும் புத்தக வெளியீடுகளுக்கும், வாசிப்புப் பழக்கத்திற்கும் அளப்பரிய தொண்டுகள் ஆற்றி வருகின்றன. வணிக அடிப்படையில் மற்ற மற்றப் பொருள்களுக்கெல்லாம் கட்டணங்கள் பெற்று விளம்பரம் செய்யும் அவை, புத்தகங்களுக்கு மட்டும் எவ்விதக் கட்டணமும் கேட்காமலேயே, அவற்றைப் பல்வேறு வகைகளில் மக்களுக்கு அறிமுகம் செய்விக்கின்றன. தமிழ்நாட்டுத் தேசிய நூலக வார விழாக்கள் இப்படிப்பட்ட சிந்தனைகளை ஏந்தியவாறு நடைபெற்றால் பாரதி சொன்ன வீடுதோறும் கலையின் விளக்கம் என்பது வெகுதூரத்தில் இல்லை.

- படங்கள் : ஹரீஸ்

"பழைய சினிமா பாட்டுன்னா நான் கண்ணை மூடிட்டுக் கேட்பேன்"

"புது பாட்டுனா..?"

"காதை மூடிட்டுப் பார்ப்பேன்.."

- வி. சாரதி டேச்சு



**புத்தகத் திருவிழா!**

180க்கும் மேற்பட்ட தமிழ், ஆங்கில புத்தகக் கடைகள்

# 24–வது சென்னை புத்தகக் கண்காட்சி

## ஜனவரி – 5-ம் தேதி முதல் 16 வரை

**இடம் : காயிதே மில்லத் அரசினர் பெண்கள் கல்லூரி, சென்னை – 2**

| பார்வை நேரம் | |
|---|---|
| | வேலை நாட்களில் – மாலை 2.30 முதல் இரவு 8.30 வரை |
| | விடுமுறை நாட்களில் – காலை 11.30 முதல் இரவு 8.30 வரை |

**நுழைவுக் கட்டணம் – ரூ.2–00 மட்டும்**

வாங்கும் அனைத்துப் புத்தகங்களுக்கும்

## சிறப்புத் தள்ளுபடி – 10%

**தினமும் மாலை 7.00 முதல் 7.45 வரை – சிறப்புப் பேச்சாளர்கள்**

| தேதி | தலைப்பு | பேச்சாளர் |
|---|---|---|
| 06.1.2001 | எழுத்தும் ரசனையும் | திலகவதி, I.P.S. |
| 07.1.2001 | அரசியலில் இலக்கியம் | குமரி அனந்தன் |
| 08.1.2001 | இதுவரையில் இலக்கியம் | விக்ரமன் (எழுத்தாளர்) |
| 09.1.2001 | எலக்ட்ரானிக் மீடியாவும் இலக்கியமும் | சுஜாதா |
| 10.1.2001 | பத்திரிகை இலக்கியம் | மாலன் |
| 11.1.2001 | வெளிநாட்டுத் தமிழர்களின் புத்தக ஆர்வம் | லேனா தமிழ்வாணன் |
| 12.1.2001 | படிப்பும் உடல் நலமும் | Dr. G. சிவகுமார் |
| 13.1.2001 | கவிதைகள் அன்றும் இன்றும் | கவிஞர் வாலி |
| 14.1.2001 | சின்னத்திரையும் இலக்கியமும் | பி.என். பரசுராமன் |
| 15.1.2001 | இலக்கியமும் நேர நிர்வாகமும் | Dr. R. கார்த்திகேயன் |
| 16.1.2001 | படிக்கும் வழக்கம் | வாஸந்தி |

Programmes sponsored by : Eagle Diaries, Chennai




**The Book Sellers' and Publishers' Association of South India**

Canteen by : 'அறுசுவை அரசு' நடராஜ ஐயர்

**Advt. by - Tamil Nadu Book House, Chennai - 600 005.**

‘**தா**னியேல் நாடாரின் டூரிங் டாக்கீஸில் ஞாயிற்றுக்கிழமை காலைக் காட்சிக்கென ஒரு கூட்டம் உண்டு. சேதுவில் முழுகிக் கரையாத பாவங்களை அந்த மலையாளப் படங்களைத் தரிசித்துத் தீர்த்துக் கொள்கிற கூட்டம்! இன்னார் அன்னாரென்கிற வரைமுறை கிடையாது. எவ்வித அதிர்ச்சியும் அடைவதில்லையென்கிற பிரதிக்ஞையுடன் சென்றால் தீவின் பல முக்கியஸ்தர்களை அங்கே பார்க்கலாம்' என்று அருள்தாஸ் சொன்னது அற்புதமேரிக்கு நினைவு வந்தது.

இந்த நேரத்தில்தான் அங்கே போவது பற்றிய இயல்பான தயக்கமெழுந்து அவள் வேகத்தைக் குறைத்தது. பிறகு, பொழுது சாயப் போகலாமா என்கிற யோசனை வந்தபோது, விதியே போல் தானியேல் நாடார் எதிரே பைக்கில் வருவதைக் கண்டு, உற்சாகமானாள்.

# அலை உறங்கும்

நடுச்சாலைக்குச் சென்று நின்றுகொண்டு இருபுறமும் கை நீட்டி அவரை நிறுத்தச் சொன்னாள்.

"அட, மேரியா? ஏம் புள்ள?" என்றார் நாடார்.

உடனே எழுந்த தயக்கத்தை உதறியவளாக, "ஐயாவைத்தாம் பாக்க வந்தேன்" என்றாள் தாழ்ந்த குரலில்.

"அம்மை ஏதுங் கேட்டு வரச் சொன்னுதா? பணங்கிணம்..."

"இல்லீங்க. கொஞ்சம் வேற விசயம்."

அவர் புருவம் நிமிரப் பார்த்தார்.

"செரி. வண்டில ஏறுவ இல்ல? டவுன் வரையிலும் போறன். வனில பேசிக்கிடலாம்" என்று சொன்னார்.

அவள் உடனே சரி என்றாள். கால் வைத்து ஏறி, உயரமான அவரது புல்லட்டின் பின் இருக்கையில் தன்னை ஒடுக்கிக்கொண்டு அமர்ந்தாள்.

"ம், சொல்லு. ஏதும் பிரச்னையா? அருள்தாஸ் வூட்டுல இருக்கானில்ல?" என்று நாடார் கேட்டார்.

"ஆமா மொதலாளி."

"சரி, சொல்லு."

எப்படித் தொடங்குவது என்று அவளுக்குப் புரியவில்லை. எல்லைகளிலிருந்து தொடங்கி மையப் புள்ளியை அடைவதைக் காட்டிலும் முதல் வரியில் செய்தியைச் சொல்லி விடலாம் என்று பட்டது. நாடார் அதிரலாம். மிரட்டலாம். வெறுமனே கேட்டுக் கொள்ளவும் செய்யலாம். அண்ணனைக் கூப்பிட்டும் பேசலாம். ஆனால் இந்தக் கணம் சொல்லிவிட வேண்டும். அது முக்கியம்.

தன்னை திடப்படுத்திக் கொண்டு ஆரம்பித்தாள்.

"உம்மாண்ட பாத்து வந்த சோலி, இன்னமே அண்ணனால பாக்க முடியாது மொதலாளி."

வண்டி நின்றுவிட்டது.

"என்ன சொல்லுத புள்ள? அருளுக்கு என்னாச்சி?" என்று பதைத்தார் தானியேல் நாடார்.

"அதுக்கு ஒண்ணும் ஆவலை முதலாளி. ஆனா இந்த சோலி வேணாம்னுட்டு ஒரு இது; பயப்படுதுன்னே வெச்சிக்கங்களேன். உம்மாண்ட நேருல சொல்ல வெக்கமாட்டு."

"உனக்கு எல்லாந் தெரியுமா?"

"அண்ணன் சொல்லீருக்கு மொதலாளி. ஆனா, செத்தியமா வெளில உட மாட்டேன். நெஞ்சுக்குள்ளாரவே பொதைச்சிட்டேன், பார்த்துக் கிடுங்க."

அவள் குரல் தழுதழுக்கத் தொடங்கியது.



# கடல்

பா. ராகவன்

"எனக்குஞ்சொி, அம்மைக்குஞ்சொி, இது பயந்தான். ஆனா நீங்க பின்னால நிக்கிய ளேன்னிட்டு ஒரு இது. ஆனா இனி முடியாது மொதலாளி. மன்னிச் சிக்கிடுவியளாம். அண்ணனுக்கு நேருல சொல்ல நா வராதுங்கறான்."

"அதான் பொட்டச்சி நீ வந்தியாக் கும்" என்றபடி மீண்டும் வண்டியைக் கிளப் பினார்.

நூறடி தூரம் கடக்கும்வரை அவர் ஏதும் பேசவில்லை. பிறகு, "நான் என்ன நெனச் சிக்கிடப் போறேன்? அவனுக்கு நல்லது செய்யணும்ன்னுதானே வரச் சொன் னேன்? வேண்டான்னு நெனச்சான்னா, புடிச்சி இளுக்கவா முடியும்? வேறென்ன செய்யிதானாம்? போட்டு கட்டணும், சம்பாரிக் கணும்னு மூச்சுக்கு மூச்சு பொலம்பு வானே?"

"ஆட்டோ ஓட்டலாம்னு இருக் காக மொதலாளி."

"என்னது? ஆட்டோ ஓட்டு றானா? சுத்தப் பைத்தாரனாட்டம் என்ன பேசுதான்? எவங்குடுக்கான், இவன் ஓட்ட ஆட்டோ? காசு போட்டு வாங்குவானாமா? கடனா? வெளங்கப் போறதில்ல, பார்த் துக்கிடு."

"மொதலாளி அப்பிடிச் சொல்லிடாதிய. ஒரு பார்ட்டி ஆட்டோ குடுக்க ஒப்புட்டிருக்காவ. அண்ணனுக்கும் பளக்கமுண்டு."

"ஆட்டோ ஓட்டுறதுலயா?"

"அது இப்பம் ஒரு மாசமா பளகிடிச்சி. நாஞ்சொன்னது அந்தப் பார்ட்டி விசயம்."

"ஆரு? அசலூர்க்



காரனா?"

"இல்ல மொதலாளி. நம்ம தெக்கு விதி அக்ரகாரத்தாளுவ."

"ஆத்தி! என்ன கூத்துக்கதை சொல்லுத நீயி? அய்யமாரு ஆட்டோ ஓட்டப் போறா களாமா?"

"அப்பிடித்தாம் மொதலாளி. அப்புசாமி அய்யரு மவளும் மருமவனும் மெட்ராசுல இருக்காவ. சொத்துபத்து நெறைய போல. பிரிஞ்சிருந்த குடும்பம் சேர்ந்திடுச்சா? இப்பிடி ஒரு ரோசனை பண்ணாங்க போல."

"என்னன்னு? ஆட்டோ ஓட்டுத முன்னா?"

"இல்லே. ஒரு ஆட்டோ வாங்கி இங்க ஸ்டாண்டுங்கள்ல வுட்டா, நல்ல வருமான மில்ல? அண்ணங் கூட சொல்லிச்சி. நாளொண்ணுக்கு எட்டு நூறு நிகரம் நிக்குமுன்னு."

"வாடகை டிரைவருக்கு எவங்குடுக்கான் எட்டு நூறு?"

"அது இல்ல மொதலாளி. அண்ணனுக்கு மாசச் சம்பளம் மாதிரி ஒரு நாலாயிரம் தர் றதா பேச்சு."

"புரியலையே புள்ள? ஊருல ப்ரொபசனல் டிரைவருங்க நூத்திப் பதினெட்டு பேரு இருக் காவ. எவனும் உட மாட்டானே."

இப்போது அவள் தயங்கினாள். சொல் லலாமா என்று நினைத்தாள். சொல்லி விடுவதுதான் எல்லாவற்றுக்குமே நல்லது என்று தோன்றியது. ஆகவே, "மொதலாளி மனசோட வெச்சிக்கிடணும். இதுல ஒரு விசயம் இருக்கு."

"என்னது?" என்றார் தானியேல் நாடார்.

"அண்ணனுக்கும் அந்த அய்யமார் வூட்டுப் பொண்ணுக்கும் ஒரு இது."

"அட்றா சக்கைன்னானாம். படுவா மூச்சு விட்டதில்ல, எங்கிட்ட?"

"வேறென்னங்கய்யா? பயமும் வெக்க முந்தான். எப்பிடியோ ஆயிப் போச்சது இது."

"பெரிய புரட்சியால்ல இருக்குது. கோயிலுக்காரவங்க அப்பால அவுக குடும் பத்தைச் சேர்க்க மாட்டாவளே."

"அதென்னமோ தெரியலை முதலாளி. மொதல்ல உங்க கையில சொல்லீறணும்னு அண்ணனுக்கு ஒரு இது. சொல்லீட்டேன். எங் களுக்கு ஒரு நல்லது கெட்டதுன்னா, நீங்க தானே மொதலாளி, முன்ன நின்னு முடிப்பீக?"

"அதுக்கென்ன? முடிச்சிரலாம். பய இப் பிடியொரு ரூட்டு போட்டானா. நமக்கு மேல கள்ளப் பயனாயிட்டானே புள்ள? ம்? என்ன நாஞ்சொல்லுறது?"

அவரது புன்னகையே அவளுக்கு விரும்பிய சம்மதமாகவும் ஆசியாகவும் தென்பட்டது. கோயில் வாசலில் இறங்கிக் கொண்டு, "வாரேன் மொதலாளி. எது என்னமோ, நீங்க எங்க கொல தெய்வம் மாதிரி. உம்மை மறக் கதுக்கில்ல" என்று கைகூப்பினாள்.

"அட போவியா? பெரிய வார்த்தையெல் லாம் சொல்லிக்கிட்டு. நான் ஏன் கோவிக்கப் போறேன் இதுக்கு? நல்ல விசயந்தானே? அருளை வரச் சொன்னேன்னு போய்ச் சொல்லு. தொழிலுக்கில்ல. சும்மா பேசத்தான்" என்று சொல்லிவிட்டுப் புகை பரப்பிக் கடந்து போனார்.

மிகுந்த நிம்மதி உணர்வு மனத்தில் பரவ, உமாதேவியின் வீட்டை நோக்கி நடந்தாள்.

மஞ்சளும் கறுப்பும் கலந்து புதிய ஆட்டோ பளபளப்பாக வாசலில் நின்று கொண்டிருந்தது. பின்புறம் பெரிதாகத் தெரிந்த பதிவு எண்ணுக்கு உமா குங்குமமிட்டுக் கைகூப்பினாள். இலேசான தூற லொன்று அவள் நெற்றியின் மேல் விழுந்தது.

> **"ரம்சானுக்குப் பிறகும் சண்டை நிறுத்தம் அறிவிச்சிருக்காங்க!"**
>
> **"விடுதலைப்புலிகளா...? இந்திய அரசா...? பாகிஸ்தான் நாட்டினரா?"**
>
> **"ஊஹூம்... என் அம்மாவும், என் மனைவியும்!"**
>
> **— புளியரை கணேசன்**

"டே அருளு! பாத்து ஓட்டணும் தெரி யுமா? பொண்ணு மாதிரி வெச்சிக்கிடணும். தப்புத் தண்டா பக்கம் போனியோ, மவனே..." என்று போலியாக மிரட்டிச் சிரித்தான் சங்குக் கடை ராஜு.

வாழ்விலே முதல்முறையாக அப்புசாமி சட்டை அணிந்திருந்தார். பழைய தட்டுச் சுற்று பழுப்பு வேட்டிகளுக்கு விடை கொடுத்து விட்டுப் புதிய எட்டு முழத்துக்கு மாறி யிருந்தார்.

"நெசமாத்தான் சொல்றியா அப்புசாமி? நீ நாளையிலேருந்து அக்னி தீர்த்தத்துக்கு வர லியா?" - நம்ப முடியாமல் கேட்டார் நீல கண்டன்.

"ஆமா. சாயந்தரமா வந்து யூனியன் கார்டை சரண்டர் பண்ணிப்பிடறேன்னு சொல்லிடு. போதும் எல்லாம். இந்தப் புதுத் தொழில் லாபமாகட்டும். நஷ்டமாகட்டும்; ஆனா நான் மறுபடி புரோகித வேலைக்கு வரதா இல்லே. எனக்கே சலிச்சுப் போச்சு."

"நீ பேசறதே புரியலை. சலிக்கறதாவது?"

"வாஸ்தவம். சலிப்புன்னா உழைப்பு மேல இல்லை. இதுவரைக்கும் உழைச்ச விதத்துல காசுதான்னாலும் கசந்தே போச்சு போ. எத்தனை தர்ப்பணம். எத்தனை பரிகாரம். எத்தனை தோஷத்துக்குக் கழுதையா கத்தி

யிருப்பேன். அந்த வேளை சாதத்தைத் தவிர ஆத்மாவுக்கு ஒரு திருப்தி உண்டா? உனக்குக் கிடைச்சிருக்கா சொல்லு?"

"போடா, பெரிய இவனாட்டம்! ஆட்டோ வாங்கி ஓட்டினா ஆத்ம திருப்தி கிடைச்சுடும்ங்கறியா?"

"அது இல்லே. ஆனா மனசறிய இதுல தப்பேதும் பண்ணப் போறதில்லியே. வரவன் போறவன் பர்ஸைப் பார்த்துண்டே ஜோஸி பாக்க வேணாமே நான்? எவனோ ஓட்டப் போறான். இன்னிய வருமானம் இதுன்னு தரப் போறான். தெனப்படி முன்னூறு ரூவா, அசல் அடைக்கன்னு எடுத்து வெச்சிடணும்னு ஆர்டர் போட்டிருக்கா எம் பொண்ணு. மேற்கொண்டு வர்றது பத்து நயா பைசான்னாலும் அதுக்குண்டானதுதான் ஜீவனம்."

"யார் குடுத்த யோசனை இது?"

"அவதான்!" என்று உமாவின் பக்கம் கைகாட்டினார் அப்புசாமி.

"இது ஏன், எதுக்குன்னு இப்ப சொல்றதுக்கில்லே மாமா. ஆனா கண்டிப்பா ஒருநாள் உங்காத்துப் படியேறி வந்து நானே எங்கப் பாவை சொல்லச் சொல்லுவேன்" என்று உமா சொன்னாள்.

"அது எப்போ?" என்றார் நீலகண்ட சாஸ்திரிகள்.

"நிச்சயமா இப்ப இல்லை" என்றபடி உமா



மெதுவாகத் திரும்பி அருள்தாஸைப் பார்த்தாள்.

சொற்களற்ற உலகில் தனித்து விடப்பட்டவன் போல அவன் தலைகுனிந்திருந்தான். தன் செயலின் நியாய, அநியாயங்கள் பற்றி அவன் யோசிக்காமலில்லை. ஆனால் யோசித்து விடுவதால் மட்டுமே எதையும் நியாயப்படுத்திவிட முடியுமா என்று இப்போது தோன்றியது அவனுக்கு.

அதுகாறும் உமா அவனிடம் ஒரு சொல் கூடப் பிறகு பேசியிருக்கவில்லை. அகிலாவின் உதவியுடன் ஒரு ஆட்டோ வாங்க விருப்பதையும் மனத்தின் காயப்பட்ட பிரதேசங்களின் ரணம் தீரும்வரை இனி பேச்சில்லை அவனுடன் என்பதையும் அவள் அற்புதமேரி மூலமே தெரியப்படுத்தியிருந்தாள்.

"உன் பெருந்தன்மைக்கு நன்றி சொல்ல ஏலாது உமா. ஆனா அண்ணன் தகுதிக்கு நீ ரொம்ப ஒசத்தி" என்று தழுதழுத்துச் சொன்னாள் மேரி.

"காதல்ல தகுதி கிடையாது மேரி. நீ யாரையாவது காதலிச்சு அதைப் புரிஞ்சுக்கறதுதான் இதுக்கு ஒரே வழி. ஆனா, காதலிக்கறது மூலமா ஏற்படற தகுதியை ரெண்டு பேர்ல யார் ஒருத்தர் குறைச்சுண்டாலும் தப்புதான். முழு மனசோட நேசிக்கறது மூலம் நான் அவன் உணர்வை கௌரவிச்சேன். அதை அவன் திருப்பிக் காட்டணுமில்லே? சீன்னு நினைக்கறாப்பல பண்ணிட்டானேன்னுதான் ஆறலை."

மேரி பதில் பேசாதிருந்தாள்.

"போட்டு ஒழிஞ்சா என்ன? செத்தா போயிட்டோம்? செத்தே போனாத்தான் என்ன? இப்படிக் கேவலப்பட்டுப் போறதை விட அது ஒண்ணும் குறைச்சலில்லைன்னு நான் சொன்னேன்னு அவங்கிட்ட சொல்லு."

"கண்டிப்பா சொல்லுதேன் உமா."

"பழைய ஞாபகத்துல திரும்ப அவன் என்கிட்ட பேச முயற்சி பண்ண வேண்டாம்னும் கண்டிப்பா சொல்லிடு. அதுக்கு சம்மதிச்சா அவன் வரலாம்."

ஒருகணம் தயங்கிய மேரி, "தப்பா நெனச்சிக்காத உமா. எத்தனை நாளைக்கு இது..." என்று கேட்டாள்.

"தெரியாது. முதல்ல அவன் மறுபடி ஆம்பளையாகணும். அப்புறம் மனுஷனாகணும். அதுக்கும் மேல பெரிய மனுஷனாகணும். நாலு ஆட்டோ அவன் வாங்கி வாடகைக்கு விடட்டும் முதல்ல."

பதில் பேசாமல் மௌனமாகத் திரும்பி நடந்தாள் மேரி.

மூன்று சக்கரங்களினடியிலும் மூன்று எலுமிச்சம் பழங்களை வைத்தான் ராஜு. பெரிய சாமந்தி மாலையை அப்புசாமி எடுத்து வர, அருள்தாஸ் அதை வாங்கி முன் பக்கம் அழகாக மாட்டினான்.

தெற்குத் தெருவே நின்று வேடிக்கை பார்க்க, வண்டி புறப்பட்டது.

"உனக்குத்தான் தேங்ஸ் சொல்லணும் ராஜு" என்று உமா அவனைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

"அட, இதென்ன உமா பெரிய விசயம்? எலக்சன் சூடு பிடிக்கட்டும். ஒரு மாசத்துக்கு நம்ம வண்டிய கான்ட்ராக்டு போட்டுருதேன்" என்றான் உற்சாகமாக.

மிகுந்த மன நிம்மதியுடன் அவன் வீட்

## முட்டைக்கு டாட்டா!

"முட்டையின் மஞ்சள் கருவில் கொலஸ்ட்ரால் மிகுந்துள்ளது என்று வேதியல் மதிப்பீடுகள் நிரூபித்துள்ளன. இந்த கொழுப்பு கல்லீரல் மற்றும் ரத்தநாளங்களில் படிந்து, தமனிகளைத் தடிக்கச் செய்கின்றன. முட்டைகள் சில சமயம் ஒவ்வாமையை உருவாக்குகின்றன. கால்வாதம், மூட்டு வீக்கங்கள் மற்றும் பிற நோய்கள் முட்டை உண்பதால் அதிகமாகின்றன.



அதில் கார்போஹைட் ரேட்டுகளும், வைட்டமின்களும் போதுமான அளவில் இல்லை. எனவே மூளைக்கு வேண்டிய ஊட்டச்சத்து அதில் இல்லை. முட்டையில் உள்ளதைவிட அதிக அளவு புரோட்டீன், பயறு வகைகளிலும் சோயா பீன்ஸிலும் உள்ளது. முட்டைகள் எளிதில் செரிப்பதில்லை. முட்டையில் இருக்கும் சல்மோனல்லா பாக்டீரியா தொற்றுவதற்கு வாய்ப்பு உள்ளது. இந்த வகை பாக்டீரியாக்கள் வயிற்றுக் கோளாறை உண்டு செய்பவை.

– சமீபத்தில் சென்னையில் நடந்த இயற்கை மருத்துவம் மற்றும் யோகாசன மாநாட்டில் டாக்டர் ஏ.வி.ஜி. ரெட்டி.

— கௌசி

டுக்குள் நுழைந்தாள். முதல் காரியமாக அகிலாவுக்குக் கடிதமெழுத வேண்டுமென்று தோன்றியது. பரபரவென்று பேப்பரை எடுத்து எழுத ஆரம்பித்தாள்.

அன்புள்ள அகிலா, ஆட்டோ புறப்பட்டு விட்டது. என்னால் முடிந்தது, அவனுக்கு நான் ஒரு பாதையைக் கொடுத்திருக்கிறேன். அப்பாவுக்கொரு மாறுதலையும் எனக்கே ஒரு ஆறுதலையுங்கூட.

இந்தக் கணம் பாட்டி இல்லாத ஏக்கம் தான் நெஞ்சு முழுக்கப் பரவி நிற்கிறது. நல்லவளானாலும் அவள் சிந்தனை முழுக்க அழிவைப் பற்றியதாகவே இருந்தது, கடைசிக் காலம் வரை.

ஆனால் நான் வாழ்வதை மட்டுமே நேசிப்பவள். மிக வெறித்தனமாக நேசிப்பவள். செயலற்றே இருந்தாலும் என்றோ ஒரு நாள் எல்லோரும் அழியப் போவது நிச்சயம். அந்த விநாடிவரை சும்மா இருப்பானேன்?

அடுத்த வருஷம் அடுத்த ஆட்டோ வாங்கி விடுவேன், எப்படியாவது. அதற்குள் உன் கடனையும் அடைத்து விடுவேன்.

ஆனால், யோசித்துப் பார்த்தால் அடைக்கக்கூடிய கடனா நீ எனக்குத் தந்திருக்கிறாய் என்றுதான் தோன்றுகிறது. உன் பணமல்ல; மனசுதான் இந்த என் வண்டியின் விசையாக இருக்கிறது.

வெற்றி கண்ட ஒரு காதல் அதிக பட்சம் சாதிக்கக்கூடியதென்ன என்பதற்கு உன் வாழ்க்கை ஒரு உதாரணம்.

தோல்வியுற்றவள் மீண்டெழுந்து வந்தால் என்ன சாதிக்க முடியுமென்பதற்கு என் வாழ்க்கை உதாரணமாகும்; நிச்சயம்.

ஒன்று உறுதி. நான் உன்னைப் போல் ஒருக்காலும் ராமேஸ்வரத்தை விட்டு ஓடிப் போக மாட்டேன். நான் ஜெயித்ததைச் சொன்ன பிறகாவது இங்குள்ள அலைகளுக்கு ரோஷம் வந்து எழுந்து வீசுகிறதா பார்க்கிறேன்.

அப்பாவுக்கு நிரம்ப சந்தோஷம். அநேகமாக அவர் அடுத்த வாரம் புறப்பட்டு உன் வீட்டுக்கு வருவார். அப்போது என் விஷயத்தை லேசாக அவர் காதில் போட்டு வை. ரொம்ப குதித்தால், ஒரு மிரட்டல் போதும். அடங்கி விடுவார். அதற்கு அவசியமிருக்காது என்றே நம்புகிறேன். காரணம், அவர் கனிந்திருக்கிறார். எல்லா அர்த்தத்திலுமாகவே இதனைச் சொல்கிறேன்.

வேறென்ன? ராமு அத்திம்பேருக்கு என் வணக்கங்களைச் சொல். குட்டிப் பெண்ணுக்கு அன்பு முத்தங்கள். உன் அன்புள்ள உமா.

எழுதி முடித்து, கவரில் போட்டு ஒட்டி, பெட்டியில் சேர்க்க வெளியே வந்தாள்.

வானம் இருண்டு தூறல் பெரிதாக விழத் தொடங்கியிருந்தது. நல்ல மழை பெய்தால் நன்றாயிருக்கும் என்று நினைத்தாள்.

நிறையப் பேர் ஆட்டோ கூப்பிடுவார்களே.

(முற்றும்)




# இலக்கியப் பீடம்

(காலாண்டு இதழ்)

## அமரர் ரங்கநாயகி அம்மாள் நினைவு நாவல் போட்டியில் ரூ.5,000/-
## முதல் பரிசு பெற்ற 'கிருஷ்ணா' அவர்களுக்குப் பரிசளிப்பு விழா

மலேசிய நாட்டுப் பொதுப்பணித்துறை அமைச்சர்

டத்தோஸ்ரீ எஸ். சாமிவேலு தலைமை வகித்துப் பரிசு வழங்குவார்.

பால ஜோதிடர் வித்வான் வே. லட்சுமணன்,
டாக்டர் பூவண்ணன், இலக்கியச்சுடர் த. இராமலிங்கம்
சொற்பொழிவாற்றுவார்கள்.

நாள் : 5.1.2001 வெள்ளிக்கிழமை

இடம் : தென்னிந்தியத் திரைப்பட வர்த்தகசபை அரங்கு
(பிலிம் சேம்பர் – அண்ணா மேம்பாலம் அருகே, சென்னை –6)

நேரம் : மாலை 6:30, தேநீர்: மாலை 6.00

*விழாவின் நிறைவில், கூட்டத்திற்கு வருபவர்களுக்கு நூலொன்று அன்பளிப்பாக வழங்கப்படும்.*

தங்கள் வரவை அன்புடன் எதிர்நோக்கும்
கலைமாமணி விக்கிரமன்
ஆசிரியர்.

# அக்னிசர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

அதிர்ஷ்ட வாய்ப்புகள் அள்ளிக்கிட்டு வரும் வாரமிது. முக வசீகரம் கூடும். ஆபீஸ்ல உற்சாகமான சூழ் நிலை இருக்கும். பேச்சல சாமர்த்தியம் வெளிப்படும். சட்டத்துறையில் இருக் கீங்களா? அப்ப, உங்களுக்குப் பெயரும் புகழும் ஜோரா கூடி வரும். நிர்வாகத் திறமையில உங்களை மிஞ்ச ஆளே இருக்காது. இந்த ராசிக்கார பெண்களுக்கு, பொன், பொருள் சேர்க்கை ஏற்படுமாமே! அப்ப ஜாலி தான்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் வரை)*

நீங்க கொஞ்சம் உஷாரா இருக் கிறது நல்லது. நிறைய கிரகங்கள் அனுகூலமா இல்லை. மனசுல சின்னச் சின்ன சஞ்சலம் உண்டாகும். புது ஆளுங்ககிட்ட எச்சரிக் கையா பழகுங்க. லிமிட்டைத் தாண்டிப் பேசக் கூடாது. பெரியவங்க ஆலோசனையை மதிச்சு நடக்கறது நல்லது. விஷக்கடி தொல்லை ஏற்படலாம். ஜாக் கிரதை. ஆஞ்சநேயரை தியானம் பண்ணிக் கிட்டே இருங்க. கஷ் டம் வராம காப் பாத்துவாரு.



**மிதுனம் :** *(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்களுக்கு ரொம்ப நாளாவே மனசுல ஒரு குறை. என்னடா, நம்ப உழைப்புக்கும் திறமைக்கும் உரிய வருமானம் கிடைக்கலி யேன்னு கவலையாகூட இருக்கும். அந்த நிலை மாறுகின்ற காலம் வந்தாச்சு. அளவான வளர்ச்சி ஏற்படும். உடம்பு படுத்துச்சுன்னா, கவலைப்படாதீங்க... பிரார்த்தனை, கிரக சாந்தி, ஹோமம், தான தருமம்னு உங்களால முடிஞ்சத செய்யுங்க... அமைதி தானா கிடைக்கும். புது காரியத்துல ஈடுபடும்போது நிதானமா நடத்துக்குங்க... சத்ய சாயி பாபா அருளால பிரார்த்தனை பலிக் கும்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கோர்ட், வழக்கு, வியாஜ் ஜியம்னு பட்டதெல்லாம் போதுமடா சாமி! இனிமே உங்களுக்கு நல்ல திருப்பமும், சாதக மான தீர்ப்பும் கிடைக்கும்னு ராசிபலன் சொல்லுது. கணவன் - மனைவி உறவு சகஜமா இருக்கும். வெளியூர் பிரயாணம் போறது ரிஸ்க்கான விஷயம். மனை, வீடு, ரியல் எஸ்டேட், வாகனம் இதெல்லாம் லாபம் தராது. பார்த்து பிசினெஸ் செய்யுங்க. முடிஞ்சபோது கோயில், குளம்னு போய் கிரக வழிபாடு செய்யுங்க. நல்லது நடக் கும்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களா நீங்க? அப்ப, கவலையை விடுங்க... ஓகோன்னு வரப் போறீங்க. வியா பாரிங்களும் செழிப்பா இருக்கப் போறீங்க. ஆனா, கணவன் - மனைவி உறவுதான் கொஞ்சம் வடாயா இருக்கும். பொறுமையா, அனுசரிச்சு நடந்துக்குங்க. பெண்களைப் பொறுத்தவரை, உற்சாகமான வாரம். எல்லாமே மாமூலா நடக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு விருப்பமில்லாத இடங்களுக்கு மாற்றல் உத்தரவு வரும். ஸ்ரீகுரு ராகவேந்திர சுவாமியை வேண்டிக்குங்க. கஷ்டமெல்லாம் கரைஞ்சு போகும்.

நடக்குமென்பார்,



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

மனசுக்குப் பிடிச்ச மாதிரி சில அனுபவங்களும், சம்பவங்களும் உண்டாகும். உங்க புத்திசாலித்தனம் 'பளிச்'னு தெரியும். குழந்தை பிறக்கும். இல்லன்னா பெத்த குழந் தைகளால சந்தோஷம் கிடைக்கும். பண நட மாட்டத்துக்குக் குறைவே இல்லை. வெளி நாட்டுக்குப் போற அதிர்ஷ்டம்கூட இருக்கு. உற்சாகமான வாரம். ஜமாயுங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

சூரியன், சுக்கிரன், கேதுன்னு எல்லாமே அனுகூலமாக இருக்கிறதால, அளவான பலன் கிடைக்கும். அரசாங்க விஷயத்துல, திருப்தியான நிலைமை இருக்கும். கலைத்துறைக்காரங்களுக்கு,

வரவேற்பு, பாராட்டு, பட்டம், விருதுன்னு அமர்க்களப்படும். புதிய பொருள் சேரும். ஆடை, அணிமணி, அலங்காரப் பொருள், வாசனை திரவியம்னு நிறைய ஆதாயம் வந்து சேரும். ஜென்ம ராசியில, செவ்வாய் இருக்கறதால, கோபத்தையும் பதற்றத்தையும் குறைச்சுக்குங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

வியாபாரிங்களுக்கு நல்ல வளர்ச்சி தெரியுதுங்க. எழுத்து, பத்திரிகை, விஞ்ஞானம் போன்ற துறையில யோகமான அம்சங்கள் நிறையவே கூடும். பெண்கள் சாமர்த்தியமா காரியத்தைச் சாதிச்சுக்குவாங்க. காசு மேலே காசு வந்து கை நிரம்பும். படிக்கிற பசங்களுக்குத் திறமை கூடும். வெளிநாடு போற வாய்ப்புக் கைகூடும். பல நேரங்கள்ள, தொட்டது பொன்னாகும்.

# நடக்கும்!



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

வாழ்த்துக்கள்! மத்தவங்க பாராட்டற மாதிரி நிறைய சாதனைகள் செய்யப் போறீங்க... கணவன் - மனைவிக்குள்ள அன்பும், அந்நியோன்யமும் அற்புதமா இருக்கும். கூட்டுத் தொழில் ஏற்றம் தரும். சிவப்பு பொருள் லாபத்தைக் கொண்டு வரும். ஆனா, உடல் ஆரோக்கியம்தான், ஒரு நாள் இருந்ததுபோல இன்னொரு நாள் இருக்காது. கவனமா இருக்கணும். விருந்து, உபசாரம்னு நிறைய சந்தர்ப்பம் வரும். புதிய நண்பர்கள் கிடைப்பாங்க. மிதமான பலன்கள் கிடைக்கும்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

'கிடு கிடு'ன்னு வளரப் போறீங்க. அதுக்கான சமயம், சந்தர்ப்பம் வந்தாச்சு! வீட்டுல விசேஷம் நடக்கும். நிறைய சுபச் செலவுகளால உங்க பணப்பை இளைக்கப் போகுது. செய்யும் தொழில் எதுவானாலும் நல்ல லாபம் கிடைக்கும். வீண் விரயம், ஆடம்பரம் எல்லாம் ஒத்து வராது. பார்த்து செலவு பண்ணுங்க. தந்தைக்குச் சிறிது உடல்நலம் குன்றலாம். உஷாரா இருங்க. கணவன் - மனைவி உறவு சீராக இருக்கும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*



மகர ராசிக்காரரான பட்டுக்கோட்டை பிரபாகருக்கு இது யோக வாரமாம்.

பெண்களுக்கு ரொம்ப நல்ல பலன் நடக்கப்போகுது. படிக்கிற பசங்களுக்கும், செழிப்பான பாதை உருவாகும். ஞானமார்க்கம், வேதம், வேதாந்தம்னு பெரிய விஷயங்களில் ஈடுபாடு அதிகமாகும். வியாபாரிகளுக்குச் சிறு சிறு தடைகள், சறுக்கல்கள் உண்டாகும். வீண் அலைச்சல் படுத்தும். நேர்மையா நடந்துக்கிட்டா நிறைய சங்கடங்களை 'ப்பூ'ன்னு ஊதிடலாம். எந்தக் காரியத்திலும் வேகம் காட்டாதீங்க. விவேகம் தானா வரும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

கணவன் - மனைவி உறவுல அபாரமான முன்னேற்றம் தெரியும். குடும்பத்துல அன்பு அந்நியோன்யம் சகஜமா இருக்கும். மூத்த சகோதர, சகோதரர்களால் அனுகூலம் கிடைக்கும். எதிர்ப்பு குறையும். எதிரிகள் புறமுதுகு காட்டி ஓடிப் போவாங்க. வீண் செலவு கையைக் கடிக்கும். காசு விஷயமாச்சே! கறாரா நடந்துக்குங்க. சந்தோஷப்படற மாதிரி சுபச் செய்தி வரும். ○

ஜனவரி 3 முதல் 9 வரை

# இனிமேல் ஆரம்பம்

**ப்**ரீதி விழிகளைத் தேய்த்து விட்டுக் கொண்டு மறுபடியும் கம்ப்யூட்டர் திரையைப் பார்த்தாள். நெருக்கமாய்த் தொடுத்த நித்யமல்லியைப் போல, நளினமாய் வரைந்த இழைகோலம் போல, சேமியா பாயசத்தில் பொன்னிறமாய் மிதக்கும் முழு முந்திரி பருப்புகள் போல - கம்ப்யூட்டர் திரையில் 'அன்புள்ள கண்ணம்மாவுக்கு' என்று தொடங்கிய அஜய்யின் காதல் மெயில்.

'உன்னிடம் நேரில் பேச வெகு ஆவலாக இருக்கிறேன். எப்படியும் இன்று உன் சம்மதத்தைப் பெற்றுவிட வேண்டும் என்கிற துடிப்புடன் இதை எழுதுகிறேன்.

அது சரி. உன் மனத்தில் நீ என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய். பொறுமையாக ஒரு ஜீவன் உன் பார்வைக்காகவும், பரிவுக்காகவும், காத்துக் கொண்டிருப்பது உனக்குத் தெரியவில்லையா. இன்னும் எத்தனை நாளுக்கு இந்த நாடகம். சீக்கிரம் ஒரு பேரனைப் பெற்றுக் கொடுத்தால் அப்பாவுக்கும் அம்மாவுக்கும் திருப்தியாக இருக்கும். உன் சம்மதம் தெரிந்து செயல்பட காத்திருக்கும் - அஜய்.

பின் குறிப்பு : 'அன்புள்ள அஜய்' என்றோ, 'உன் காதலன் அஜய்' என்றோ 'உன்னையே நினைத்து ஏங்கும் அஜய்' என்றோ, உனக்குப் பிடித்தமான வார்த்தையைப் போட்டுக் கொள். ஆனால் 'ஏமாளி அஜய்' என்று மாத்திரம் சொல்லிவிடாதே. என் மனம் தாங்காது.

கடிதம் ஆங்கிலத்தில் இருந்தாலும் கிட்டத்தட்ட ஐந்தாறு மொழிகள் தெரிந்த ப்ரீதிக்கு நொடிப் பொழுதில், எல்லா மொழிகளிலும் கடிதத்தின் வாசகங்கள், மனசுக்குள் தட்டாமாலை சுற்ற ஆரம்பித்து விட்டது. எங்கோ ஒரு மூலையில் இருந்து, பாரதிராஜா காகிதங்களைப் பறக்கவிட்டு, கூடவே வெள்ளை உடை தேவதைகளையும் கோரஸ் ஆட அனுப்பிக் கொண்டிருந்தார்



அவளது கண்கள் தீபாவளியையும், பொங்கலையும் ஒரு சேரக் கொண்டாடிக் கொண்டிருந்தன. நிஜம்தான். அஜய்யின் கடிதத்தைப் பார்த்த பரவசத்தில் மத்தாப்புக்களாய்ச் சுடர்விட்ட விழிகள் தாங்க முடியாத பூரிப்பில், கண்ணீரில் தளும்பி பொங்கல் பானை போல பெருகியது. அவள் அவசரமாய் ஐந்தாவது முறையாகக் கடிதத்தை மேய்ந்துவிட்டு உடனேயே அதற்குப் பதிலும், மெயிலில் தயாரிக்கத் தொடங்கி விட்டாள்.

பக்கத்து அறையிலிருக்கும் அஜய்யின் வெப்சைட்டுக்கு இங்கிருந்து ஒரு மடல்.

அடடா இந்த கம்ப்யூட்டர், ஈமெயில், வெப்சைட் இதுபோன்ற நவீன உத்திகளை எல்லாம் கண்டுபிடித்த புண்ணிய ஆத்மா வாழ்க! இதெல்லாம் இல்லாவிட்டால், சகுந்தலை தாமரை இலையில் எழுதியது போல, தமயந்தி அன்னத்தைத் தூதுவிட்டது போல, அவ்வளவு ஏன், சென்ற நூற்றாண்டின் பெரும்பாலான கால கட்டங்கள்வரை தபால்காரரை நம்பியிருந்த காலங்கள்போல - காத்திருக்காமல் - இப்படி அமெரிக்காவுக்கானாலும், அடுத்த அறைக்கானாலும் அந்த ரங்கமாய் செய்தியை அனுப்ப உதவும் கம்ப்யூட்டருக்குச் சந்தனம் குங்குமம் வைத்துச் சுற்றிவந்து நமஸ்காரம் செய்தால்கூட தோஷமில்லை என்றே தோன்றுகிறது.

# 11

அஜய் அலுவலகத்துக்கு வந்து தனது அறையில் அமர்ந்து, 'மெயில் பாக்ஸ்'ஸை திறக்கும்முன் தனது பதில் அங்கிருக்க வேண்டுமென்பதில் படு சுறுசுறுப்பாக இயங்குகிறாள் ப்ரீதி.

'டியர் அஜய்',

இது என்ன இப்படி ஒரு சம்பிரதாயமான மெயில்? இப்படியொரு கடிதத்தை எதிர்பார்த்து எத்தனை நாட்களாக காத்துக் கொண்டிருக்கிறேன் தெரியுமா? கம்ப்யூட்டருடன் பழகிப் பழகி காதல் என்கிற வார்த்தையே உங்களது அகராதியிலிருந்து காணாமல் போய் விட்டதோ என்று நான் நினைத்திருந்தேன். என்னிடம் பேச நாள், நட்சத்திரம் பார்க்க வேண்டுமா என்ன.. முகூர்த்தத்தை எப்பொழுது வைத்துக் கொள்ளலாம் என்று நேரிடையாக் கேளுங்களேன். உங்கள் அப்பா, அம்மாவுக்குப் பொழுதுபோக வேண்டுமென்றால் இரண்டாவது தேனிலவுக்கு நம்முடன் சேர்ந்து வரட்டும். நான் கண்டு கொள்ளவில்லை. அதற்காக கல்யாணமான முதல் வருடத்திலேயே பேரக் குழந்தையெல்லாம் எதிர்பார்க்க வேண்டாமென்று சொல்லுங்கள். இப்படிக்கு உங்களை சந்திக்கத் துடிக்கும்...

ப்ரீதியின் வார்த்தைகள், உன்னிமேரியின் புருவத்தை



அனுராதா ரமணன்

உயர்த்தின. ப்ரீதியோ ஒரு பட்டாம் பூச்சியைப் போல சுறுசுறுப்பாய்த் தன் வேலைகளில் ஈடுபட்டாள். அலுவலகத்தின் பிரதான கண்ணாடிக் கதவு திறக்கப்படும் போதெல்லாம் ஒருவித படபடப்புடன் தலையை உயர்த்திப் பார்த்தாள். நடுவே அப்பாவின் நினைப்பும் வராமலில்லை.

'அப்பா கில்லாடிதான். ஒரு மனுஷரோட மனசை எத்தனைத் துல்லியமாய்க் கணக்கு போட்டு வெச்சிருக்கார். இன்னிக்கு சாயந்திரம், அவரை 'ஸ்நோ ஃபீல்டு'க்கு அழைச்சிட்டுப் போய் அவருக்குப் பிடிச்ச 'பெர்ஷியன் டிலைட்' ஐஸ்க்ரீமை வாங்கித் தரணும். என்ன ரெண்டு நாளைக்கு ராத்திரி முழுக்க லால்குடியும் குன்னக்குடியுமா சேர்ந்து டுயட் வாசிக்கற மாதிரி மூச்சு விட்டுண்டு இருப்பார். ஆனாலும் அதுல ஒரு சந்தோஷம் அவருக்கு.

இந்த முறை கண்ணாடிக் கதவு திறக்கப்பட, மென்மையான 'பெர்ஃப்யூம்' வாசனை, அஜய் வருவதைக் கட்டியம் கூற - பலவித சுருதிகளில் 'குட்மார்னிங்' ஒலிக்க, அஜய், ப்ரீதியைத் தாண்டி தனது அறைக்குள் நுழையுமுன், ஒரு வினாடி தயங்கி நின்றான்.

"ஹாய், ப்ரீதி, குட்மார்னிங்..."

பதிலுக்குக் காலை வணக்கம் சொன்ன ப்ரீதியால் அவனை நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. எத்தனை படித்திருக்கிறான் அவன். எத்தனை பட்டங்களை வாங்கியிருக்கிறான். எத்தனை துறைகளில் தேர்ச்சி பெற்றிருக்கிறான். ஆனாலும் இதெல்லாம் பாழாய்ப்போன வெட்கத்துக்குத் தெரியவில்லையே. அவன் கொஞ்சம் நிதானித்தான். அத்தனை அவசரத்திலும் அவள் முகத்தில் தெரிந்த மாறுதலை கவனித்து சிரித்தபடி கேட்டான்.

"ஏய்... என்னாச்சு உனக்கு?"

"ஒண்... ஒண்ணுமில்லையே..."

"மெயில் பார்த்துட்டியா?"

- இந்தக் கேள்விக்கு ஒரு கணம் என்ன பதில் சொல்வதென்றே தெரியாமல் திணறி, பின், குறும்புடன் சொன்னாள்...

"ம். என் மெயில் பாக்ஸை திறந்து பார்த்துட்டேன். உங்களோடதை இன்னும் பார்க்கலை..."

"உனக்கு ஏதோ சந்தோஷமான மெயில்போல இருக்கு..."

- இப்படிச் சொன்னவனை நிமிர்ந்து பார்த்தாள். அவனோ தனக்கே உரிய விஷமச் சிரிப்புடன் கண்களைச் சிமிட்டி விட்டு தன் அறைக்குள் நுழைந்தான். எப்பொழுதுமே அவனைப் பின் தொடர்ந்து உள்ளே நுழையும் ப்ரீதி, இன்று சற்று தாமதித்தாள்.

'இருக்கட்டும். என்ன அவசரம். அவர் நிதானமாய் மெயிலைப் படிச்சுப் பார்க்கட்டும். அப்புறம் என்னைக் கூப்பிடட்டும்...'

அவள் ஏதோ வேலை இருப்பதுபோல பிரபாவின் எதிரில் வந்து அமர்ந்தாள். அவளது கம்ப்யூட்டரில் சமீபகாலமாய் ஏதோ இடையூறு இருப்பதாகச் சொன்னதை அக்கறையுடன் விவரித்தாள். காஷியர் துரைசாமியிடம் போய் ஜெர்மனியிலிருந்து வந்து இறங்கியுள்ள நான்கு நபர்கள் கொண்ட குழு, இங்கிருந்து காஞ்சிபுரம் போய்வர என்ன செலவாகும் என்று கணக்கு கேட்டாள். சீனுவாசராகவனிடமும் மறக்காமல் வந்து நின்று, முதல் நாள் பிரதோஷத்தில் 'அப்பா உங்களைப் பார்த்தாராமே? உங்களைப் பத்தி ரொம்ப ஒசத்தியா சொன்னார்...' என்று கூறி, மனிதர் எதிர்பாராத விதமாய் ஒரு டன் ஐஸைத் தூக்கி தலையில் வைத்தாள். இத்தனைக்கு நடுவிலும் அஜய்யின் அறையிலிருந்து எப்பொழுது அழைப்பு வரும் என்று அவளது இதயம் 'தடக் தடக்' என்று அடித்துக் கொண்டிருந்தது.

கடைசியில் ப்ரீதியை அழைத்தபடி அஜய்யே அவளது கேபினுக்குள் வந்து நின்றான். முகம் முழுக்க உற்சாகத்தில் பளபளத்தது. குரலில்கூட அந்த மகிழ்ச்சியின் பிரதிபலிப்பு.

"ப்ரீதி, ஒரு நிமிஷம் இங்க வர்றயா?"

"கபாலிங்கறது நீதானா?"
"ஆமாங்க ஏட்டய்யா!"
"ஆர் யூ ஷ்யூர்?"
"ஆமாங்க."
"ஆர் யூ கான்ஃபிடன்ட்?"
"ஆமாங்க."
"ஓ.கே. உன்ன லாக்கப்ல 'லாக்' பண்ணிடறேன்."

- சென்னிமலை சி.பி. செந்தில்குமார்



"இதோ..."

அவள், தான் இருப்பது அலுவலகம் என்பதைக் கூட மறந்து இறக்கை இல்லாத குறையாகப் பறந்து வந்தாள்.

"ப்ரீதி.. நான் உடனே பெங்களூர் போகணும். திரும்பிவர ரெண்டு நாளாகும்..."

ப்ரீதி, மெலிதாய் அதிர்ந்தாள். முகத்தில் கேள்விக் குறியுடன் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"பெங்களூரா... என்ன திடீர்னு...?"

"அதெல்லாம் வந்து சொல்றேனே. ரெண்டு நாள் நீதான் எல்லாத்தையும் பார்த்துக்கணும். முடிஞ்சா ஜெர்மன் காரங்களை எங்கயாவது சுத்திப் பார்க்க அனுப்பிவை. நான் எங்கேயிருந்தாலும் ஃபோன் பண்ணி அப்பப்ப பேசிக்கறேன்."

ப்ரீதி தயங்கினாள். மற்றவர்கள் கவனிக்காதவாறு கையில் ஏதோ ஃபை லுடன் அவனது முகத்தையும் பார்க்காமல் தலை குனிந்தபடி கேட்டாள்.

"மெயில் பாக்ஸைத் திறந்து பார்த் திங்களா?"

அப்பப்பா... இதைக் கேட்பதற்குள் அவளது குரல் என்னமாய் இழைந்தது. அவனோ உற்சாகமாய் நாலு பேர்கள் பார்க் கிறார்களே என்கிற தயக்கம் ஏதுமில்லாத வனாய் அவளது முதுகில் தட்டினான்.

"ஆஹா... பார்த்தேனே. ஐயாவோட குஷி மூடைப் பார்த்தாலே தெரியலை. ப்ரீதி. அனேகமா நான் திரும்பி வந்தவுடனே கல்யாண இன்விடேஷனை ப்ரின்ட் பண்ணக் கொடுக்கணும். அந்த பொறுப்பும் உன்னோடதுதான். நீயே பார்த்து நாலஞ்சு மாடல் அழைப்பிதழ்களை செலக்ட் பண்ணிவை... மிச்சமெல்லாம் வந்து பேசறேன்..."

இப்படிச் சொல்லிவிட்டு ப்ரீஃப் கேஸுடன் அலுவலக பிரதான வாசல் வரை போனவன், அங்கிருந்தவாறே ப்ரீதியிடம் கையை வீசி ஆட்டியபடி சொன்னான்.

"ஊர்லேர்ந்து திரும்ப வந்ததும் உனக்கு பார்ட்டி கொடுக்கறேன். எந்த ஹோட்டல்னு இப்பவே தீர்மானிச்சு வை..."

இதைச் சொல்லிவிட்டு அவன் மின்னலென மறைய, அலுவலகத்தின் மொத்தப் பார்வையும் ப்ரீதியின் மேல் பதிந்தது.

ப்ரீதியினுள் அடைமழையாய் ஆனந்தம்...

(தொடரும்)

இஞ்சியை சீசனுக்கு ஏற்ப பயன்படுத்த வேண்டும் என்பது ரொம்ப முக்கியம். வெயில் காலத்தில் இஞ்சியை அளவுடன் தான் பயன்படுத்த வேண்டும். காரணம், உடம்பு ரொம்ப சூடாகிவிடும். ஆனால் குளிர்காலத்தில் இதுபோன்ற கட்டுப்பாடு ஏதுமில்லை.

அல்சர் பிரச்னை உடையவர்கள் இஞ்சியை மிக எச்சரிக்கையுடன்தான் பயன்படுத்த வேண்டும். இது அல்சரை அதிகப்படுத்தி விடக்கூடும் என்பதால்தான் இந்த எச்சரிக்கை.

இஞ்சியையும், பூண்டையும் அரைத்து பேஸ்ட் போல ஆக்கி, ஃபிரிட்ஜில் வைத்துக் கொண்டு எந்த உணவு ஐட்டத்திலும் கொஞ்சம் சேர்த்தால் உடம்புக்கும் நல்லது; சுவையையும் அது கூட்டும்.

சித்த மருத்துவத்தில் ஒரு பாடல் உண்டு.

காலையில் இஞ்சி
கடும் பகல் சுக்கு
மாலையில் கடுக்காய்
மண்டலம் உண்ண,
கோலூன்றி நடக்கும்
கிழவரும்
கோலை வீசி குலாவி
நடப்பாரே!

என்ற அந்தப் பாடல் சொல்லுவது மிக எளிய ஆரோக்கிய ரகசியம். இந்தப் பாடலுக்கு விளக்கம் தேவையில்லை என்று நினைக்கிறேன்.

காலையில் இஞ்சி சாப்பிட்டால், சயனஸ், சளி போன்ற எல்லாவிதமான கப நோய்களும் போய்விடும். மதிய வேளையில் சுக்கு சாப்பிட்டால், பித்தம் சம்பந்தப்பட்ட பிரச்னைகள் தீரும். மாலையில் கடுக்காய் சாப்பிட்டால், வாத நோய்களிலிருந்து விடுதலை கிடைக்கும்.

கடுக்காயை எப்படிச் சாப்பிடுவது? கடையில் கிடைக்கிற கடுக்காயின் மேல் தோலை மட்டும் எடுத்து பொடி செய்து, வாயில் ஒரிரு சிட்டிகைகள் போட்டுக் கொண்டு, தண்ணீர் குடித்தாலே போதும். இது இளமை மருந்து மட்டுமில்லை. மலச்சிக்கலையும் தீர்க்கும்.



மூளையை சுறுசுறுப்பாக்கும் வேலையையும் இஞ்சி செய்யும். மது போதையில் மயங்கிக் கிடப்பவர்களுக்கு, இஞ்சிக் கஷாயம் கொடுத்து, போதையைத் தெளிய வைப்பார்கள்.

ருசியின்மை, பசியின்மை, செரிமானமின்மை ஆகிய பிரச்னைகளுக்கு, இஞ்சித் துவையல் செய்து சாப்பிட்டால், நல்ல பலன் கிடைக்கும். நார் இல்லாத,

# ஆரோக்கிய

## மூலிகை மணி

டாக்டர். க. வேங்கடேசன்

டாக்டர் க. வே. அபிராமி





இளம் இஞ்சியைத் துண்டுகளாக்கி, கொஞ்சம் உப்பு, கொஞ்சம் புளி, மிளகு அல்லது மிளகாய் சேர்த்து இஞ்சித் துவையல் செய்யலாம்.

இஞ்சிச் சாறை தேங்காய் எண்ணெயில் கலந்து, காய்ச்சி, தலைக்குத் தேய்த்துக் குளித்தாலும் சயனஸ் தொல்லையிலிருந்து விடுதலை கிடைக்கும். இஞ்சிச் சாறை தண்ணீரில் கலந்து, தலையில் தேய்த்துக் குளித்தால், தலைமுடி பளபளப்பாக ஆகும். சாறை அப்படியே பயன்படுத்தினால், சிலருக்குத் தலையில் எரிச்சல் ஏற்படும். எனவே, தண்ணீர் கலந்து, சாற்றின் காரத்தினை நீர்க்கச் செய்ய வேண்டியது அவசியம்.

இஞ்சி, காய்ந்தால் சுக்கு. இஞ்சியின் தோலை 'நஞ்சு' என்று சொல்லி, அதனை நீக்கிவிட்டுப் பயன்படுத்துவதைப் போலவே, சுக்கில் நச்சு அதன் உள்ளே இருக்கிற நார். சுக்கைப் பயன்படுத்துகிறபோது, அதன் நாரை அகற்றிவிட வேண்டும் என்பது முக்கியம். சுக்கை நன்றாக இடித்துச் சலித்தால் நார் பிரிந்து விடும்.

உணவில் சுக்கை சேர்த்துக் கொள்ள ஒரு வழி பருப்புப் பொடி. துவரம் பருப்பு, கருவேப்பிலை, மிளகு, சீரகம், சுக்கு, உப்பு இவற்றைச் சேர்த்து, நன்கு பொடி பண்ணி வைத்துக் கொண்டால், அதுதான் பருப்புப் பொடி! சாப்பிடுகிறபோது முதலில் சாதத்தில் பருப்புப்பொடி போட்டு, கொஞ்சம் நல்லெண்ணெய் விட்டு, பிசைந்து சாப்பிட்டால் நாக்குக்கும் ருசி! உடம்புக்கும் நல்லது. குறிப்பாக அல்சர் உள்ளவர்கள் பருப்புப் பொடி சாதம் சாப்பிடுவதை வழக்கமாக்கிக் கொள்ளலாம்.

சுக்கை இழைத்து, பத்து போட்டால், தலைவலி தீரும்.

கேரளாவில் வர்மக்கலை மிகவும் பிரபலமானது. வர்மக்கலையின் பல்வேறு தாக்குதல் மூலம் மனித உடல் உறுப்புக்களையும், மூளையையும்கூட செயலிழக்கச் செய்துவிட முடியும். வர்மத் தாக்குதல்களின் மூலம், எதிரியைக் குறிப்பிட்ட நேரத்துக்கு மட்டும் செயலிழக்க வைக்கலாம்; பர்மனென்டாகவும் செயலிழக்க வைக்கலாம். வர்மத் தாக்குதல்களால், நினைவிழந்து போகிறவர்களின் மூளையை மறுபடி செயல்பட வைக்க மூக்கு, காது போன்ற பகுதிகளில் சுக்குப் பொடியை ஊதி, மறுபடி மூளையைச் செயல்படச் செய்வார்கள். வர்ம ஆசான்கள் எப்போதும் தங்கள் கைவசம் சுக்குப் பொடி டப்பாவை வைத்திருப்பார்கள்.

'சுப்பிரமணியருக்கு மிஞ்சின கடவுளுமில்லை; சுக்குக்கு மிஞ்சிய மருந்துமில்லை' என்று மூலிகை மணி கண்ணப்பர் அடிக்கடிச் சொல்லுவார்.

சித்த மருத்துவத்தில் திரிகடுகச் சூரணம் முக்கியமானது. சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்றும் சேர்ந்ததுதான் திரிகடுகம். இந்த மூன்றையும் சம அளவு எடுத்துக் கொண்டு, வாணலியில், இலேசாக வறுத்து, பொடி செய்து வைத்துக் கொண்டு, தினம் இரண்டு சிட்டிகை சாப்பிட்டு வர வேண்டும். குளிர் காலத்தில் சாப்பிட்டால் உடம்பு கதகதப்பாக இருக்கும்; கோடை என்றால் உடம்பு இலேசாக சூடாகி விடும். திப்பிலி, ஞாபக சக்தியை அபிவிருத்தி செய்யும் வல்லமை கொண்டது. இது கொஞ்சம் காரம் என நினைப்பவர்கள், தேனில் குழைத்துச் சாப்பிடலாம்.

# ரகசியம்!



• முத்தையா பாகவதர் - சுதந்தரத்துக்கு முன்பே

வராங்க. எல்லா ஹியூமன் பீயிங்ஸ் உள்ளேயும் ஒரு காட்டுத்தனம் இருக்கு. இந்த மாதிரி கூட்டங்கள்ல அது வெளிப்பட்டு ஃப்ரீ ஃபர் ஆல் ஆயிடுது! ஒரு



• திருச்சி சங்கரன் நடை வல்லார்!

ராஜஸ்தான்ல ஒரு புலிகள் சரணாலயம் - ரான்தாம்பர் ஃபோர்ட் சாங்கவரின்னு. கிளின்டன் அதுக்குப் போனாலும் போனார்; இப்போ வரிசையா வி.ஐ.பிங்க புலிகளைப் பார்க்கறதுக்குக் கியூல நிற்கறாங்க!

பிரிட்டிஷ் வனத்துறை மினிஸ்டர் ஹன்ஸ், ஜெர்மன் அம்பாசடர் இரண்டு பேரும் டிசம்பர் மாசம் போய்ப் பார்த்திருக்காங்க. அடுத்த மாசம் இன்னும் மூணு அயல் நாட்டுத் தூதர்கள் வரப் போறாங்களாம். ரொம்ப இன்ட்ரஸ்டிங்கான விஷயம் சதா புலிகளோட டீல் பண்ண வேண்டிய நிலையில இருந்த ஸ்ரீலங்கா முன்னாள் பிரதமர் ரனில் விக்ரமசிங்கே போயிருக்கார். இங்கேயும் புலிகள் அவரை டபாய்ச்சுட்டுத்தாம். தரிசனம் கொடுக்க மறுத்துட்டுதாம்!

தமிழ்நாட்டு அரசியல்வாதிங்கதான் புலி தேடி சரணாலயத்துக்கெல்லாம் போகாம நேரா ஜூவுக்குப் போய்டறாங்க! எல்லா காவலையும் மீறி புலித்தோலை உரிக்கற பயங்கரம்லாம் நடக்குது! நினைச்சாலே குலை நடுங்கற விஷயம். புலி ரத்தத்தை யூஸ் பண்ணி யாகம் பண்ணினா நல்லதுன்னு நம்பறவங்க ஏதாவது சைக்யாட்ரிக் பிரச்னை உள்ளவங்களாத்தான் இருக்க முடியும்.

அரசியல்ல மட்டும் இந்த சைகலாஜிகல் எக்ஸ்பிளாய்டேஷன் எவ்வளவு லெவல்ல எத்தனை விதமா இருக்குன்னு ஸ்டடி பண்ணிப் பாக்கறது ஒரு நல்ல ஆய்வா அமையும். பட்ரிசர்ச் பண்ற நபர் ரொம்ப நடுநிலையாளரா இருக்கணும்.

எக்ஸ்பிளாய்டேஷனுக்கு டிபிகல் எக்ஸாம்பிள் தரணும்னா பேரணிகளைச் சொல்லலாம். சமீபத்துல கண்ணப்பனோட மக்கள் தமிழ் தேசம் பார்ட்டி பேரணி மெட்ராஸ்ல நடந்தது பேப்பர்ல பார்த்திருப்பீங்க. கைல தடியோடதான் தொண்டர்கள் பேரணிக்கு முறை புதிய நீதி கட்சிப் பேரணிக்கு நடுவுல டுவீலர்ல மாட்டிக்கிட்டு நானே ரொம்ப அரண்டுட்டேன்னா பார்த்துக்குங்க. அரசியல் கட்சிகள் எல்லாத்துக்கும் இந்த விஷயத்துல ஒரே நீதிதான்!

கண்ணப்பன் ஊர்வலம் நடத்தின அன்னிக்கு நகரமே தலைகீழாயிடுச்சு. கிருஷ்ண கான சபாவிலே லால்குடி கிருஷ்



## சுமி சூப்பர்மார்க்கெட்

ணன், விஜயலக்ஷ்மி வயலின் கச்சேரி. மிருதங்கம் வாசிக்க வேண்டிய திருச்சி சங்கரன் குட் நாட் ரீச் ஆன் டைம். ஸ்கிரீனை இறக்கி வைச்சுட்டு மெயின் ஆர்டிஸ்ட்ஸ் இரண்டு பேரும் பழைய கால டிராமாக்கு முன்னாடி சும்மா மியூஸிக் வருமே, அதுமாதிரி வாசிச்சுக்கிட்டிருக்காங்க.

அமெரிக்காவிலேருந்து சீசனுக்காக வந்திருக்கற சங்கரன் டாக்ஸில மிருதங்கத்தோட புறப்பட்டவர், டிராஃபிக் ஜாம்ல மாட்டிக்கிட்டு ஒரு ஆட்டோவுக்கு மாறி அப்புறம் அதுக்கும் நகர வழி கிடைக்காததால வாத்தியத்தைத் தூக்கிட்டு வாக் பண்ண ஆரம்பிக்க, அவரை ஒரு ஃபேன் பார்த்திட்டு ஸ்கூட்டர்ல ஏத்திக்கிட்டு வந்து விட்டிருக்காரு.

சங்கரன் வந்தாச்சு கச்சேரி ஆரம்பிக்கும்னு சபாவுல அனவுன்ஸ் பண்ணாங்களே அதோட நிறுத்திக்கலாமில்ல... 'தி கான்ஸர்ட் வில் பிகின் நௌ, ப்ளீஸ் பேர் வித் இட்'ன்னு சொன்னாங்களே பார்க்கணும்! விஜயலக்ஷ்மியும் கிருஷ்ணனும் சங்கரன் சாரும் வெளுத்து வாங்கிட்டாங்கன்றது வேற சமாசாரம்.

**உள்**ளூர் அரசியல்வாதிகளைப் பத்தி எச்சரிக்கையோட சுதந்தரத்துக்கு முன்னாடியே ஒருத்தர் பாட்டெழுதிட்டுப் போய்ட்டார்.

தேறுதலில் லஞ்சம் கொள்ளல்
தேசம்
விட்டு நீங்க வேண்டும் ஊரூரில்
நியாயஸபை
உண்மையாயுழைக்க
வேண்டும்

நடுநிலைமை
வகிக்குமொரு
நல்ல ஸபைத்
தலைவர் வேண்டும்
வடுவுடையார்க்
கிடங்கொடாமல்
வாக்காளர் காக்க
வேண்டும்



* கண்ணப்பன் -
பேரணி சைகாலஜி

# மிரட்டல் சைக்காலஜி!

பாடினது யாருன்னு நினைக்கறீங்க. அவரும் பாரதி மாதிரி ஒரு முண்டாசுக்காரரர் - ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதர்னு ஒரு கம்போஸர். இவரோட எல்லா பாட்டையும் நொடேஷனோட ஏ.கே. கோபாலன்றவர் பப்ளிஷ் பண்ணிருக்கார். (2, சேதுப் பிள்ளை தெரு, போஸ்டல் ஆடிட் காலனி, சென்னை - 93). சும்மா புரட்டிட்டே வந்தா இப்படியொரு தேசபக்தி பாட்டு 'என்னன்னையே பாரதியே!'ன்னு ஆரம்பிச்சு...

ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதரோட ஃபேன் எங்க மாமா. அவர் வாங்கியிருக்கற பட்டங்களையெல்லாம் மூச்சு விடாம ஒப்பிப்பார். பட் இந்த ஏ.கே. கோபாலன் பாருங்க அவரைத் தூக்கிச் சாப்பிட்டுடுவார் போலிருக்கு.

பாகவத சிரோமணி, பாகவத சூடாமணி, பாகவத ரத்னம், பஜன பூஷணன், கோடையிடி ஏ.கே. கோபாலன்!

எல்லாம் சரிதான்! கோடையிடின்ற பட்டம் எதுக்கு...? யாருக்காவது தெரிஞ்சா குவிக்கா சூப்பர்மார்க்கெட்டுக்கு எழுதிப் போடுங்க!

— சுமி

# ‘சங்கீத கலாநிதி’க்கு நிகரான சந்தோஷம்!

சங்கீத கலாநிதி ஆர். வேதவல்லியின் கச்சேரி மியூசிக் அகடமியில் மாலை நான்கரை மணிக்கு ஆரம்பித்தது. ஐந்தேகால் ஆனபோது வர்ணம், இரண்டு சிறு கிருதிகள் முடித்து சஹானாவில் ஆலாபனையுமாகி கிரிபை கீர்த்தனையின் அனுபல்லவியை எட்டியாயிற்று. அரை மணிக்குள் நான்கு உருப்படி



• சுமித்ரா - வேதவல்லி - இலவச இணைப்பு!





• கௌரவ் மஜும்தார்: உயர்வு...



• ஜெயந்தி: ...உயர்வைத் தூண்டும்!

கள்– ஆனாலும் அவசரம் என்பது எங்கேயும் தெரியவில்லை. குமுட்டி கணப்பில் மெள்ள சமைக்கிற எளிமையான கச்சிதம் இவர் பாட்டு. ஃபாஸ்ட் ஃபுட், டேக் அவே ரகமல்ல. பிடித்தவர்களுக்குப் பத்தியமான ருசி!

கீர்த்தனையின் உணர்வை மாற்றாமல் பக்குவமாக ஸ்வரம் பாடினார் சஹானாவில். தியாகராஜர் தமது கனவில் கண்ட காட்சியாக ஒரு மலையின் உச்சியில் ராமனை அடியார்கள் சேவிக்கும் வர்ணனை. பாடலின் அர்த்தத்துக்குத் தொடர்ச்சியேபோல் கல்பனை ஸ்வரங்கள் அமைய, வயலினில் எம்.ஏ. கிருஷ்ணசாமியும், ம்ருதங்கம், கடத்தில் முறையே கே.ஆர். கணேஷ், புதுக்கோட்டை ராமச்சந்திரனும் அதே அணுகுமுறையுடன் ஆதரித்து வாசித்தது அழகு.

வம்சவதி சிவ யுவதி முத்துஸ்வாமி தீக்ஷிதரின் வம்சவதி ராக கிருதி. சஹானா தோற்றுவித்த ‘மூட்’ஐ அமைதி குலைக்காமல் மாற்றியது.

கரஹரப்ரியாவை வேதவல்லி அவ்வளவு கௌரவமாகப் பாடியதில் ஆச்சர்யமில்லை; ஆனால் மேல் ஸ்தாயிகளில் பாட சிஷ்யை சுமித்ராவுக்கு அவர் கண் காட்டியதும் ஒலித்த கரஹரப்ரியா இருக்கிறதே... அது வேதவல்லியின் சங்கீத கலாநிதி பட்டத்துக்கு நிகரான பூஷணம்!

கனிந்த வித்வானுக்கு, தம் கலையைத் தொடர ஓர் இளம் தாரகை சிஷ்யையாக வாய்ப்பதைக் காட்டிலும் எந்த பட்டம் உயர்வாகிவிட முடியும்!

சுமித்ரா வாசுதேவ், வேதவல்லியுடைய பாணியின் ஆதார பண்புகளை உள்ளடக்கி புதிய பிரகாசத்துடன் பாடினார். பரூர் பாணியின் துள்ளலைக் கூட கொஞ்சம் ஓரங்கட்டிவிட்டு அனந்தராமன் வயலினில் எதிரொலித்தார்.

கண்ட ஜம்ப தாள பல்லவியிலும் (வாசஸ்பதியில் ஆரம்பித்து ராகமாலிகை ஸ்வரத்தில் முடிந்தது) இந்த டீம் வொர்க் தொடர்ந்தது. கே.ஆர். கணேஷ் ம்ருதங்கத்திலிருந்து புறப்பட்ட சில தீப்பொறி ஆவர்த்தனங்கள் மட்டுமே இந்தக் கச்சேரியில் ‘ஆர்ப்பாட்டம்’ என்று சொல்லக் கூடிய ரகம். மற்றபடி,

அத்தனை லய லாவண்யங்களிடையேயும் அலட்டலில்லாத போக்கு. சலிப்பு தட்டாமல் காத்தது குரல் வளத்தை விஞ்சி நின்ற பாடகரின் ஆழ்ந்த வித்வத்; சுமித்ரா அவ்வப்போது வழங்கிய இலவச இணைப்பு! பதினெட்டு வயதுதானாம் இந்த சிஷ்யைக்கு- பாட்டைக் கேட்டால் வயதை நம்ப முடியாது.



அந்த ஹேமவதிக்கே கூட தெரியுமா என்பது சந்தேகம்தான்! தான் இவ்வளவு அழகாகவா இருக்கிறோமென்று அசந்து போயிருக்கும் அந்த ராகதேவதை- ஜெயந்தி அதை வீணையில் வாசிக்கக் கேட்டிருந்தால்.

தும்புரு

அழகுணர்ச்சி ஜெயந்தியின் வலிமை. கான்டாக்ட் மைக் பொருத்திய வீணை அணுசக்தி மாதிரி! ஆக்கவும் அழிக்கவும் பயன்படுத்தலாம். எங்கே எப்போது நிறுத்த வேண்டும் என்று ஜெயந்திக்கு மிகச் சரியாகத் தெரிந்திருப்பதால் சங்கீதம் சோபித்து ஜொலிக்கிறது.

உயர்வு உயர்வையே தூண்டும். சிதாரில் உடன் வாசித்த கௌரவ் மஜும்தார் ரவிசங்கரின் சிஷ்யர். நிறைந்த குளம்போன்ற ஜெயந்தியின் ஹேமவதியை (ஹிந்துஸ்தானியிலும் ஹேமாவதிதானாம்) அவர் தமது சிதாரில் ஒரு சிற்றாறாக்கி ஓடவிட... ஹம்சத்வனி சபாவின் வண்ணப் பந்தலின் கீழ் ஒரு சிறிய ரசிகர் மன்றமே உருவாகிவிட்டது!

ஹம்சத்வனியில் ஆரம்பித்து மிச்ர பீலூவுடன் (கர்னாடக இசையில் மிச்ர காபி) முடிந்த ஜுகல் பந்தி நிகழ்ச்சியில் மூன்றே ஐட்டங்கள்தான். ஆலாப், ஜோட், - ஆலாபனை, தானம், கற்பனை ஸ்வரங்கள், தபலா-ம்ருதங்கத்தின் ஒலிகள் சங்கமமாக ஒரு தனியாவர்த்தனம் அனைத்தையும் உள்ளடக்கி இரண்டு மணி நேரத்துக்கும் குறைவான நிகழ்ச்சியென்றாலும் தனித்தன்மையுடன் அமைந்தது. ஒலிபெருக்கி அமைப்பதற்கு அநியாயமாக அரை மணி நேரம் எடுத்துக் கொள்ளாமல் முன்கூட்டியே ஏற்பாடு செய்திருந்தால் இன்னும் கொஞ்சம் நேரம் நல்ல சங்கீதம் கேட்டிருக்கலாம்.



• நித்யஸ்ரீ: சாரீர சொத்து

மிச்ர பீலூவின் அழகை ஓவியம் போல் கௌரவ் மஜும்தார் இழை இழையாகத் தீட்டினாரெனில் ஜெயந்தி அதை வீணையிலிருந்து ததும்பியோடச் செய்தார்.

நிதின் மித்ரா தபலா அர்ஜுன் குமார் ம்ருதங்கம்- கணக்கு வழக்குகளில் புகுந்து புறப்படாமல் கணகணவென்று பொழிந்து தள்ளிய எளிமையான ஆனால் தீர்மானமான வாசிப்பு.

அகாடமியில் நித்யஸ்ரீ பாடியதை வானொலியில் நேரடி ஒலிபரப்பாக வழங்கினார்கள். அந்த ஒரு மணி நேரம் மாபெரும் ஏமாற்றம். மாட்டுவண்டியை ஸ்லோ மோஷனில் செலுத்தியது போல் ஒரு செயற்கையான காலப்பிரமாணம் இவர் பாட்டுக்கு எப்படி வந்தது! காபி ராக ஆலாபனை வெறும் ஸ்வரப் பிரஸ்தாரப் பயிற்சியாகிவிட்டதென்றால் தேவகாந்திரி கீர்த்தனை தேர்வு கச்சேரிக்கு உகந்ததாக இல்லை. காம்போதியில் (ஆலாபனை) நித்யஸ்ரீயின் அபாரமான வித்வத் அங்கங்கே பளிச்சிட்டதோடு சரி. மேல் ஸ்தாயிகளுக்குத் திரும்பத் திரும்ப ஓடிப் போய் வித்தை காட்டினால் பலர் பிரமிக்கலாம்; ஆனால் குரலோடு ரசனையும் உயர்வதே கர்னாடக சங்கீதத்துக்கு இலட்சணம்.

நித்யஸ்ரீயின் பொங்குமாங் கடல் சாரீரம் தேசிய சொத்து. தேச பக்திப் பாடல்களை நிறையப் பாடியிருக்கும் அவர் அந்த தேசிய சொத்தை உரிய மரியாதையுடனும் உயர்ந்த லட்சியத்துடனும் பயன்படுத்த வேண்டும் என்று திரும்பத் திரும்ப வலியுறுத்தத்தான் வேண்டியிருக்கிறது.



'சிறுநீர் வழியா கொஞ்சம் கொஞ்சமா உசிரு வெளியேறிப் பேயிடுற ஒரு வியாதி இருக்குது. அது இன்னான்னு தெரியுமா'ன்னு சக்கரம் சிம்பாலிக்கா கேட்டிச்சு. சூடு வெச்ச மீட்டர் கணக்கா, ஒன்னும் சிக்கலே. 'நீயே சொல்லிப்புடு'ன்னேன். நீரிழிவு... அதான்பா சர்க்கரை நோயின்னு சொல்லிச்சி. அட... ஆமான்னு ஆச்சர்யமாபூட்டுது. 'இதுக்கே இப்படி வாயப் பொளக்குறியே 'டயாபடீஸ் 2000'ன்னு கலைவாணர் அரங்கத்துலே சக்கரை நோயி மாநாடு நடக்குது. அங்க வந்து பாரு அசந்து போயிடுவே'ன்னு சொன்னதும் வண்டியை விரட்டுனேன்.

கோபாலபுரத்துல பத்து வருஷமா எம்.வி. டயபடீஸ் ஆஸ்பிடலு வெச்சிருக்குற டாக்டரு வி.மோகனும், டாக்டரு ரெமா மோகனும் அவுங்க தோஸ்த்துங்களோட சேர்ந்து ஏற்பாடு பண்ணியிருக்காங்களாம். முதல்லே கண்காட்சிய ஒரு ரவுண்டு வந்துருவோம்ன்னு சக்கரம் பின்னாலே போனேன். சும்மா சொல்லப்புடாது. நம்மள மாதிரி நாலு எழுத்து படிக்காத ஆளுங்களுக்குப் புரியற மாதிரி எக்சிபிஜன் (எக்ஸிபிஷன்தாங்க) இருந்தது. சின்னப் புள்ளைங்களுக்கு மாறு வேடப் போட்டி நடத்தினாங்க. சக்கரை நோயி மாநாட்டுல மாறு வேஷப் போட்டிக்கு இன்னா வேலையின்னு பார்த்தா அந்த புள்ளைங்கோ எல்லாருக்கும் சக்கரை நோயி இருக்காம்! இன்னாப்பா அநியாயமா கீதே. இந்த சின்ன வயசுல இந்த புள்ளைங்க இன்னா பாவம் பண்ணிப்புடுச்சின்னு சக்கரத்துக்கிட்டே கேட்டேன். பாவத்துக்கும் நோயிக்கும் முட்டாளுதனமா முடிச்சி போடுறத வுட்டுப்புட்டு நான் சொல்லுறதைக் கேளுன்னு சொன்னிச்சி. உலக சுகாதார நிறுவனம் ஒரு அபாய அறிக்கை வுட்டுக்குது. அதாவது நம்மநாட்ட 'உலக நீரழிவு நோயின் தலைநகரம்' அப்படீன்னு போல்டா அறிவிச்சுபூடுது. அதுக்கு இன்னா காரணம் தெரியுமா? வர்ற இரண்டாயிரத்து இருபத்தஞ்சுலே இந்தியாவிலே முப்பது கோடி பேருக்குச் சக்கரை நோயி இருக்குமாம்! இப்போ பத்துகோடி பேருக்கு இருக்குன்னு சொன்னதும் எக்சிபிஜன் லேர்ந்து நேரா ஆசுபத்திரிக்கு வண்டிய வுட்டேன். நம்ம உடம்புல சக்கரை எப்படியிருக்குதுன்னு பார்க்கத்தான்.

நம்ம மேயரு ஸ்டாலின் முதல் தபா ஒரு பொஸ்தகம் எழுதியிருக்காரு. வெளியீட்டு விழாவுக்கு வாரியான்னு சக்கரம் கேட்டதும் வண்டிய டபார்ன்னு ஸ்டார்ட்டு பண்ணினேன். கல்வி அமைச்சரு அன்பழகன், சாவி, வைரமுத்து, பார்த்திபன், எக்ஸ்னோரா நிர்மல்ன்னு ஏகப்பட்ட வி.ஐ.பி.ங்க வந்திருந்தாங்க. ராஜா அண்ணாமலை மன்றம் முழுக்க உடன் பொறப்புங்க. வெளி நாட்டுப் பயணம் போனப்போ கையிலே ஒரு நோட்டும் பேனா



● பாண்டவாஸ்

வும் எடுத்துக்கிட்டுப் போயி பாக்குறதையெல்லாம் குறிச்சிகினு வந்து பொஸ்தகமா எழுதுங்கன்னு வைரமுத்துதான் யோசனை சொல்லி அனுப்புனாராம். இதை மேயரு பேசும்போது சொன்னதும் நம்ம கவிஞரு மொவத்துல பல்பு எரிஞ்சுது. அப்பால அன்பழகன் பேசும் போதுதான் பெரிய அப்புளாசு. இனி மேயர் மகன் மேயர் ஆவலாம்ன்னு சொன்னதும்... அப்போ தளபதி ஸ்டாலின் தான் தலைவருக்கு அப்புறம் முதல்வரான்னு ஒரு உடன் பொறப்பு கேட்டு வெக்க, அன்பழகன் குறும்பா சிரிக்க, அரங்கமே இடியற மாதிரி அப்படி ஒரு கைதட்டலு. நானும் சேர்ந்துதான் கை தட்டுனேன். சக்கரம் மொவத்துலே ஈஆடலே. இன்னப்பா சேதின்னேன். முதல்லே மேயரை சுதந்திரமா செயல்பட வுடுங்கப்பா. நாளைக்கு



* புத்தக வெளியீட்டு விழாவில்

# ஸ்டாலின்தான் முதல்வரா?

நடக்குறது தானா நடக்கும்ன்னு சொல்லிச்க. சம்பந்தா சம்பந்தமில்லாம பேசுறதே சக்கரத்துக்கு வேலையாப் போச்சுனு சொல்ல லாம்ன்னு நெனைச்சேன். பார்ட்டி வேற ஆட்டோவுக்குப் பறந்துருமேன்னு பார்ட்டிய தாஜா பண்ணி இட்டுகினு வந்துட்டேன். ஆங்... பொஸ்தகம் பேரு 'பயணச் சிறகு கள்'ன்னு சொல்லாம வுட்டுபுட்டேன்.

அப்பாலே பெண்ட மீடியா தயாரிச்ச 'பாண்டவாஸ்' அனிமேஷன் படம் பார்க்க வாரியான்னதும், அடிச்சு புடிச்சிக் கினு கௌம்பிட்டேன். இந்தியாவுலேயே அனி மேஷன் படம் தயாரிச்சு ஹாலிவுட்டுக்கு அனுப்புன ஒரே கம்பெனி நம்ம பெண்ட போருதான். போன தபா சிந்துபாத்துன்னு ஒரு படம் தயாரிச்சாங்க. இப்போ எழுத்தாளர் சுஜாதா இதுக்குன்னே சுருக்கி எழுதுன மாகாபரதக் கதைய, குடும்பத்தோட பார்த்து ரசிக்கிற மாதிரி எடுத்துக்கிறாங்களாம்ன்னு சக்கரம் முன்னோட்டம் குடுத் துச்சு. படம் ஆரம்பிச்சதும் 'ஆ'ன்னு வாயப் பொளந்துட் டேன். கம்ப்யூட்டர் யாவாரம் பாக்குற நம்ம ஊரு ஆளுங்களா இப்படி ஒரு பொம்மை படம் எடுத்து கிறாங்கன்னு. இங்கிலிபீசுலே வந்த படம் கணக்கா சூப்பராயிருந்துது. நம்ம இசை ஞானி இளையராசாதான் மீசிக்கு. என்னமா கலக்கிப் புட்டாரு. நம்ம பாஞ்சாலி, கண் ணன், கூனி இவங்கள இந்த மாதிரி பாக்குறப்போ நல்லாத்தான் இருக்குது. பொசுக்குன்னு படம் ஒன்னரை மணி நேரத்துலே முடிஞ்சதும் எனக்கு ரொம்ப சோகமா பூட்டுது. இன்னும் கொஞ்சம் நேரம் காட்டியிருக்கலாமேன்னு. வெளியே வந்ததும் சக்கரத்துக்கிட்டே கேட்டேன். படம் எப்படின்னு. பேக்டிராப், டெக்லர், இதெல்லாம் நல்லா இருக்கு. உள்ளூரு டப்பிங் கலைஞருகளை வெச்சு ஹாலிவுட் தரத்துக்குப் பேசிக்கிறாங்க. ராசா கௌப்பிபுட்டாரு. ஆனா மோஷன் கேப்சரிங், பேசியல் அனிமேஷன் ரெண்டும் திருப்திகரமா இல்லே. பொம்மலாட்டம் பாக்குற மாதிரி இருக்கு. படத்துக்கு டைரக்டரு யாருன்னு தெரியலன்னு ஏதோ வெவகாரமாப் பேசிச்சி. ஒரு நல்ல முயற்சிய பாராட்ட மாட்டீங்களான்னு கரிச்சு கொட்டிப்புட்டு, சக்கரத்தை அம்போன்னு வுட்டுபுட்டு வந்துட்டேன்.

**- மீண்டும் சந்திக்கும்வரை, மீட்டருக்கு மேல் கேட்காத ஆட்டோ செல்வம்.**



• அப்துல் லத்தீப்



• பரிதி இளம் வழுதி



• செல்லக்குமார்



# பண்பாடு படும்பாடு!

தமிழ்நாட்டில் அடிக்கடி நம் காதுகளை வந்து தாக்கும் சொல் பண்பாடு. "தமிழர்களின் பண்பாடு" காப்பதற்கென்றே அவதாரம் எடுத்தது போல பேசும் தலைவர்கள் உண்டு. இந்த 'பண்பாடு' என்ற சொல்லே சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர்தான் தமிழில் புழக்கத்தில் வந்ததாகச் சொல்கிறார் ஈழ இலக்கியப் பிரமுகரான கா.சிவத்தம்பி. நான்கு சட்டமன்ற உறுப்பினர்களிடம், 'பண்பாடு'ன்னா என்னங்க?' என்று கேட்டு வைத்தோம். ரொம்பவே சீரியஸாகி விட்டார்கள்.

**அப்துல் லத்தீப் (இந்.தே.லீக்)**

பழக்கங்கள் ஒழுக்கங்களாகி ஒரு நிலைப் பெற்று மாற்ற முடியாத பக்குவ நிலையை அடையும்போது, அது வாழ்க்கையோடும் தொடர்புபடுத்தப்பட்டு, பண்பாடு என அறியப்படுகிறது. பண்பாடு என்பது நாட்டுக்கு நாடு ஊருக்கு ஊர், சமுதாயத்துக்கு சமுதாயம் மாறுபடும்.

**செல்லக்குமார் (த.மா.கா.)**

நம்முடைய அசைவுகளோடும் உணர்வுகளோடும் ஒன்றுபட்டு செய்கையில் வெளிப்படும் விஷயம்தான் பண்பாடு. பல்வேறு மதம் ஜாதி கொண்ட நமது நாட்டில் ஒருவருக்கொருவர் மற்றொருவருடைய, மத உணர்வுகளை மதித்து நடப்பது பண்பாட்டின் வெளிப்பாடுதான். தாய்மைக்கு மதிப்பு கொடுப்பது, ஆசிரியருக்கு மாணவன் கொடுக்கும் மரியாதை, அரசியலில் ஒரு எல்லைக்குட்பட்ட விமர்சனம் இப்படி பண்பாட்டை வெளிப்படுத்தும் செயல்கள் நிறையவே பழக்கத்தில் இருக்கின்றன. இதில் நிறைய விதிவிலக்கான விவகாரங்கள் இருக்கலாம். ஆனால் அந்த விதிவிலக்குகள் பொதுவான விதிகளாகி விட முடியாது.

**பரிதி இளம்வழுதி (தி.மு.க.)**

நாம் காலையில் எழுந்து இரவு தூங்கும் வரை செய்யும் பல செயல்கள், யோசித்துப் பார்த்தால் நமது பாரம்பரியத்தைப் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டதாக அமைந்திருப்பதைப் பார்க்கலாம். அவை எழுதப்படாத சட்டங்கள், மரபு வழி வந்தவை. உடை, உணவு மற்றும் நடத்தை ஆகியவற்றில் பிரதிபலிப்பவை பண்பாட்டுச் சமாச்சாரங்கள். எல்லோராலும் பேசப்படும் "பண்பாடு" பல சமயங்களில் பலரால் மீறப்படுகிறது என்பதையும் சொல்ல வேண்டும்.

**ஏ.எஸ். பொன்னம்மாள் (த.மா.கா.)**

பண்பாடு என்றவுடன் நமது பெண்கள்... குறிப்பாக இளம்பெண்கள் அணியும் உடைதான் என் நினைவுக்கு வருகிறது. இப்போதெல்லாம் இளம் பெண்கள், மாணவிகள் சுடிதாருக்குத் தாவி விட்டார்கள். சுடிதார் மிக சௌகரியமான உடைதான். சந்தேகமில்லை. ஆனால் அம்மா பொண்ணுங்களே! அந்தத் துப்பட்டாவைத் தூக்கிப் போடாமல் தோளில் போடுங்கம்மா... மற்றவர்கள் பேச இடம் கொடுக்காதீங்கம்மா... என்ன? சொல்றது காதில் விழுதா... அப்புறம் அரசியல்ல ஓட்டு வாங்கறதுக்காக, பொய்யும் பித்தலாட்டமும் பண்ணறது கூட பண்பாட்டுக்கு விரோதமான செயல்தான்.

சந்திப்பு : **ஸ்ரீநிவாசன்**
படங்கள்: **ராஜன்**

**Butterfly**



# சூப்பர் சேவிங்ஸ் சலுகை!



மேட்ச்லெஸ்

இப்போது **ரூ.1900** தள்ளுபடி

நீங்கள்

மூன்றுகல் மேட்ச்லெஸ்சுடன்

எமரல்டு இணைந்து

வாங்கும்போது.

| | | |
|---|---|---|
| ரூ.5450 | + | ரூ.3150 |
| | = | ~~8600~~ 6700 ✓ |

**இணைந்து வாங்கும் போது உங்களுக்கு ரூ.1900/- மிச்சம்**



எமரல்டு






**Butterfly**®

*Good for a lifetime*

GANDHIMATHI APPLIANCES LTD.,
143, Pudupakkam Village, Kelambakkam - Vandalur Road,
Kancheepuram District, Pin-603 103, Tamilnadu, INDIA
E-mail: gmal@butterflyindia.com
Website: www.butterflyindia.com

BREEZE R&M/244/2000

**Distributors: Chennai:** Pee Pee Appliances, 5229161/5229076/5224906, Butterfly Home Appliances, 4345199. **Kancheepuram:** Prakash Electronics, 22626, 23461. **Madurai:** Kanchan Agencies, 747270/742235. **Tirunelveli:** Century Mktg., 334526/337891. **Vellore:** Vijayalakshmi Enterprises, 227734. **Kumbakonam:** Butterfly Home Appliances, 423294/424947. **Coimbatore:** Butterfly Distributors, 397179. **Salem:** Butterfly Distributors, 260205/262393. **Namakkal:** Sri Poomahal Agencies, 31383/32383. **Erode:** Sri Krishna Agencies, 262244. **Pondicherry:** Mani Appliances, 221430/335090. **Neyveli:** Sakuntharama Vessels Corp., 52612/51010. *** Also available at all leading shops.**

தாராவி. மும்பையின் பிரசித்தி பெற்ற குடிசைப் பகுதி. ஆசியாவிலேயே மிகப் பெரிய குடிசைப் பகுதி என்று குறிப்பிடப் படுகிறது. சுமார் ஓராண்டு காலம், தாராவிக்குச் சென்று, அங்குள்ள மக்களுடன் பேசி, அவர்களது வாழ்க்கை நிலையை ஆராய்ந்து 'ரீ டிஸ்கவரிங் தாராவி' என்ற ஆங்கிலப் புத்தகம் எழுதியிருக்கிறார், கல்பனா சர்மா. அண்மையில் சென்னைக்கு வந்திருந்த கல்பனா சர்மா புத்தகம் எழுதிய அனுபவம் பற்றி நம்மிடம் சில நெகிழ்ச்சியூட்டும் சம்பவங்களைப் பகிர்ந்துகொண்டார்:

● நூற்று எழுபத்தைந்து ஹெக்டேர் பரப்பில், ஒரு காலத்தில் தண்ணீர் தேங்கிக் கிடந்த இடம்தான், இன்று தாராவி என்ற பெயரில் குடிசைகள் நிறைந்து காணப்படு கிறது. தாராவி, ஒரு மீன் பிடிக்கும் கிராமமாக இருந்தது என்று சொன்னால், இன்று நம்புவது ரொம்ப கஷ்டம். அந்த அளவுக்கு ஏராளமான மாற்றங்கள்.

● நான் தாராவியைப் பற்றி புத்தகம் எழு தப் போகிறேன் என்றபோது, என் சகாக்கள், 'தாராவியைப் பற்றியா? ஏன் உனக்கு வேறு எந்த சப்ஜெக்டும் அகப்படவில்லையா?'' என்று கேலியாகத்தான் கேட்டார்கள். "அரசாங் கத்துக்கும், நகர்ப்புற நாகரிகத்தில் மூழ்கிப் போன மக்களுக்கும் வேண்டுமானால் தாராவி, மும்பை மாநகரத்திற்கு ஒரு திருஷ்டி போலத் தோன்றலாம். ஆனால், அதன் உள்ளே சென்று பார்த்தால், அதன் மக்களிடம் பேசிப் பார்த் தால், உங்களின் எண்ணம் மாறிவிடும்'' என்று நான் பதில் சொன்னேன்.

● தாராவியில் வசிக்கும் மக்களில் மூன்றில் ஒரு பகுதிக்கும் மேலானவர்கள் தமிழ் நாட்டிலிருந்து வந்தவர்கள். அந்தத் தமிழ் நாட்டுக்காரர்களில் பாதிப் பேர் திருநெல்வேலிக்காரர்கள். தங்களது பகுதிக்குக் காமராஜ் நகர் என்று அவர்கள் பெயர் சூட்டி இருக்கிறார்கள் என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்!

● பொதுவாகவே, தாராவியில் குற்றங்களில் ஈடுபடுகிறவர்கள் அதிகம் என்று சொல்லுவது வழக்கம். ஆனால், இது உண்மைக்குப் புறம்பானது. மும்பை நகரத்து குற்றப்புள்ளி விவரங்களைப் பார்த்தால் மும்பை நகரம், தாராவியைவிட பத்திரமானது இல்லை என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

● தாராவியில் ஜன நெரிசல் அதிகம். அடிப்படை வசதிகளான தண்ணீருக்குப் பஞ் சம்; சாக்கடை வசதி கிடையாது. போதிய கழிப்பிட வசதி கிடையாது. ஒரு சிறுமியிடம் ஒருமுறை, "தண்ணீர்ப் பிரச்னை எப்படி இருக் கிறது?" என்று கேட்டேன். "தண்ணீர்ப் பிரச் னையே எங்களுக்கு இல்லை! இங்கே பாருங் கள், எவ்வளவு பெரிய டிரம் முழுக்க தண்ணீர் பிடித்து வைத்திருக்கிறோம்'' என்றாள் வெகுளித்தனமான முகத்துடன்.

● ஒரு பகுதியில் இன்று பல அடுக்கு மாடிக் கட்டடங்கள் முளைத்து விட் டன. தாராவியிலேயே பிசினஸ் செய்து, பணம் சம்பாதித்தவர்கள், இன்று சொந்தமாக, அடுக்கு மாடிக் கட்டடங்களில் பிளாட் ஒன்றை வாங்கிக் கொண்டு சௌகரியமாக இருக்கிறார்கள். அப்படி வசிப்பவர்களில் ஒருவர் சம்சுதீன். தமிழ்நாட்டில் திருக்கோவிலூரைச் சேர்ந்தவர். பல வருடங்களுக்கு முன்பு பிழைப்புத் தேடி மும்பை வந்தவர். ஆரம்ப நாட்களில், மும்பையின் புற நகர்ப் பகுதிகளிலிருந்து அரிசி கடத்தி வந்து விற்றுப் பிழைத்தவர். பின் 'சிக்கி' என்று சொல்லப்படும் வேர்க்கடலை கேக் செய்து விற்றவர். இன்று இவரது தயாரிப்பான ஏ-1 சிக்கி, பெயரில் மட்டுமில்லை, வியாபாரத் திலும் ஏ.ஒன்தான்!

● இன்று தாராவியின் மக்கள் தொகை




# பொங்கல் ஓமகள்



• கல்பனா சர்மா

எவ்வளவு [illegible] துல்லியமாக யாருக்கும் தெரியாது. அரசாங்கம், ஹெலிகாப்டரிலிருந்து குடிசைகளை ஏரியல் சர்வே செய்து புகைப்படம் எடுத்து, குத்து மதிப்பாக இரண்டரை லட்சம் என்று சொன்னது. தாராவியில் இயங்கும் ஒரு சமூக நல சங்கம் வீடு வீடாகப் போய் கணக்கெடுப்பு நடத்தியதில், உண்மையில் அரசாங்கம் கொடுத்த புள்ளி விவரத்தைவிட பல மடங்கு மக்கள் இருப்பது தெரிய வந்தது.

ஒரு குடிசைக்குள்ளேயே கீழேயும், மேலே 'மச்சு' கட்டிக் கொண்டும் இரண்டு குடும்பங்கள் வசிக்கிறார்கள். இன்னும் சில குடிசைகளுக்குப் பொங்கல் வீடுகள் என்றுபெயர். மூன்று ஷிப்ட்களில், மக்கள் வந்து தங்கி விட்டுப் போவார்கள்! அவரவர்க்குரிய பெட்டி, படுக்கை இருக்கும். தன்னைத் தவிர இன்னும் அந்தக் குடிசைக்குள் தங்கியிருப்பவர்கள் யார் யார் என்ற விவரம் ஒருவருக்கும் தெரியாத விசித்திரமும் அங்கு உண்டு.

• இங்குள்ள தமிழர்கள், தங்கள் குழந்தைகளை நன்கு படிக்க வைக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். தாராவியில் உள்ள நான்கு மாநகராட்சி பள்ளிகளில் தமிழ் கற்பிக்கப்படுகிறது. தவிர காமராஜ் உயர்நிலைப் பள்ளி என்ற ஆங்கில மீடியம் தனியார் பள்ளியும் உள்ளது.

• 1887ல் கட்டப்பட்ட மசூதி ஒன்று உள்ளது. 1913ல் கட்டப்பட்ட பிள்ளையார் கோவிலும் உண்டு. இன்னொரு இந்து கோவிலுக்கு வயது இருநூறு! இங்கே இந்தியாவின் பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த, பல மதங்களைச் சேர்ந்த மக்களும் வேற்றுமைகளை மறந்து ஒற்றுமையாகத்தான் வாழ்ந்து வந்தார்கள். பாபர் மசூதி இடிப்பும் அதனையடுத்து நடந்த வன்முறைகளும் இவர்களிடையே மாறாத வடுவை ஏற்படுத்தி விட்டன. முன்பு மொழி ரீதியில் கூட்டாக இருந்த மக்கள், இன்று மத ரீதியில் இடம் பெயர்ந்து வாழ்கிறார்கள். வேற்று மதத்தவர் நிரம்பிய பகுதிகளில் குறைந்த எண்ணிக்கையில் வாழ்வது அபாயகரமானது என்ற பய உணர்வு நிலவுவதே இதற்கும் காரணம்.

• தாராவியில் நான் சந்தித்தப் பல பெண்களிலும் மிக முக்கியமானவர் அமீனா. மும்பை மதக் கலவரங்களின்போது, அவர் துணிச்சலுடன் ஆற்றிய பணிகளை, மற்றவர்கள் சொல்லக் கேட்டபோது புல்லரித்தது. ஊரடங்கு உத்தரவு அமலில் இருந்த போதும், துணிச்சலுடன் வெளியே சென்று, பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவியிருக்கிறார். உயிரைப் பணயம் வைத்து இப்படி ஊருக்காக உழைப்பவர்கள்கூட இருக்கிறார்களே!

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **ஸ்ரீஹரி**

"என்னப்பா... இன்னும் புயல் அடிக்கல்லே! காலையிலே கரை கடக்கும்னு டீ.வி.லே சொன்னாங்களே?"புயலின் கோரம் புரியாத என் ஆறு வயது மகன் புலம்பினான்.

"கவலைப்படாதே... அடிக்கும்! தோ... இப்போதான் லேசா காத்தடிக்கத் தொடங்குது! மரமெல்லாம் ஆடுது பாரு!" அவனுடைய அக்கா அவனைச் சமாதானப்படுத்தினாள்.

"ஹையா! புயல் வருமில்லே! வரணும்! என் 'லைஃப்லே' புயலே பார்த்ததில்லே!" தோளைக் குலுக்கினான். புயல் என்னமோ வீட்டுக்கு வரும் விருந்தாளி போலக் காத்திருக்கும் அவனது ஆர்வமும், ஏதோ நூறு வயது வாழ்ந்தவன் போல 'என் லைஃப்லே' என்னும் முதிர்ந்த தொனியும் என்னைச் சிரிக்க வைத்தன.

"ஏம்பா! சிரிக்கிறே? புயல் வராதா?" கோபத்துடன் என்னை நெருங்கினான்.

"சீச்சீ! அதெல்லாம் இல்லேடா! ஆனா நீ நினைக்கிறா மாதிரி புயல் சந்தோஷமானது இல்லே! நிறைய அழிவு ஏற்படும்டா!" நான் சொல்லிக் கொண்டிருக்கும் போதே -

"ஹலோ... ராஜன் சார்! 'பீச்' பக்கம் போவல்லியா? இந்த நேரத்திலே போய்ப் பார்த்தா, கடல் ஜோரா இருக்கும்!" ரிடையர் ஆன அறுபது வயது மனிதர் என் ஆறு வயதுப் பையன் போலத் துள்ளினார் - எதிர் வீட்டிலிருந்து!

"மனோ... அப்பாவை விடாதீங்க! கூட்டிட்டுப் போவச் சொல்லுங்க! நானும் என் பையனும் கிளம்பிட்டோம்!" பிள்ளைகளை உசுப்பி விட்டார்.

"அப்பா! வாங்கப்பா... பீச்சுக்குப் போவோம்!" என் பெண்ணே இப்போது என்னை நச்சரித்தாள். பையன் கூடவே கத்தினான்.

# புயல்

**தங்க. சிவராசன்**

"ஏங்க... சார்... இப்படிப் பசங்களைக் கிளறி விட்டீங்க?" எதிர் மாடியில் இருப்பவரை முறைத்தேன்.

"ராஜன்! எதுக்குக் கோவப்படறீங்க? புயல் என்ன தினமுமா வர்றது? அபூர்வமாக் கிடைக்கிற 'த்ரில்'! புள்ளைங்க அனுபவிக்கட்டுமே!" அவர் அடங்கிய பாடில்லை!

"அவரு சொல்றதும் சரிதாங்க! எனக்கும் ரொம்ப நாளாப் பாக்கணும்னு ஆசை! வாங்க! சாப்பிட்டுட்டு ஆட்டோ 'புடிச்சி'ப் பாத்திட்டு வருவோம்!" என் மனைவியும் சேர்ந்து கொண்டாள்.

அடுத்த சில நிமிடத்தில் அவசர, அவசரமாக உணவு பரிமாறினாள்.

"சீக்கிரம்... சீக்கிரம்!" எல்லோரையும் முடுக்கிக் கிளம்பத் தயாரானாள். நாங்கள் வீட்டை விட்டு வெளியே கிளம்புகையில் மதியம் ஒன்றரை இருக்கும். காற்றின் சுழற்சி அதிகம் ஆனது. மரங்களின் கிளைகள் பூதாகாரமாய்த் தட்டாமாலை ஆடின. நாங்கள் தெருவில் இறங்கி நடக்கையில், ஒரு தென்னை மட்டை எங்கிருந்தோ பறந்து வந்தது.

"ஏய்... ஏய்... பாத்து!" நான் பிள்ளைகளைப் பாதுகாப்பாய் அணைத்துக் கொண்டேன். நல்ல வேளை! அது எங்களைத் தாண்டிக் குப்பைத் தொட்டியருகே விழுந்தது.

"இதெல்லாம் தேவையா?" என் மனைவியை முறைத்தேன். எதிர் வீட்டுக் கிழத்தை மனதுக்குள் சபித்தேன்.

"மனோ! புயல் வந்திட்டுதுடா!" தம்பியின் காதில் மகிழ்ச்சியோடு கிசுகிசுத்தாள் என் மகள்.

"ஆரத்தி எடு!" அவளை அடக்கினேன். இருமருங்கிலும் இருந்த தென்னை, மா, வாழை என்று எல்லா மரங்களும் பேயாட்டம் ஆடி வயிற்றில் புயலைக் கிளப்பின.

தெருமுனைக்கு வந்து ஆட்டோ பிடித்தோம்.

"எங்கே சார்?"

"பீச்சுக்கு!" என் பிள்ளைகள் உற்சாக



மாய்க் கத்தின.

"சந்தோஷம்ங்க! நானே போவனும்னு நெனைச்சேன்! அலை பயங்கரமா அடிக்குதாம்... என் தம்பி பாத்துட்டு வந்தான். அது மட்டுமில்ல! ஊரே அங்கதான் இருக்காம்!" டிரைவர் சொல்ல,

"பாத்தீங்களா... எங்களைத் திட்டறீங்களே?" மனைவி தன் கட்சியை நியாயப்படுத்தினாள்.

ஆட்டோ காமராஜர் சாலையில் போகும் போதே காற்றின் வலிமை கூடி விட்டது. மரங்களைப் போல, தியேட்டர்கள் முன்னே நின்ற 'கட் அவுட்'கள் குலைசாயத் துடித்தன. ஒருசில முறிந்து விழுந்தன.

"பார்த்துப் போப்பா!" நான் வெடவெடத்தேன். மனைவியும், குழந்தைகள் கண்களிலும், நெஞ்சிலும் மகிழ்ச்சி சூறாவளி!

"மனோர்!" என்ற சத்தம் கேட்டு அலறினேன்.

"ஒண்ணுமில்லே... சார்! அதோ அந்தக்

கடை பேர்ப் பலகை முறிஞ்சிக்கிச்சி!" டிரைவர் சிரித்தார். எதிரே இருந்த ஒரு பெரிய துணிக்கடையின் மிகப் பெரிய பெயர்ப் பலகை தன்னைச் சார்ந்து பிடித்திருக்கும் இரும்புச் சட்டங்களோடு 'குலை' தள்ளியிருந்தது.

ஆட்டோ பாரதி பூங்காவைக் கடந்தது.

"கொஞ்சம் நிறுத்துப்பா!" என்றேன்.

பூங்காவின் இரு பக்கத்திலும் நின்று நிழல் கொடுத்த நெடுநாளைய மரங்கள் கவிழ்ந்திருந்தன. 'காற்று எப்போது கொடுமைக்கார மருமகள் ஆயிற்று? வயதானவர்களை வெளியே துரத்துபவள் போல இந்த வயதான மரங்களின் பிறப்பை எப்படி அறுத்தெறிய முடிந்தது?" கண்ணீர் முட்டியது. கூடவே –

புயல் வீசும் நான் போலவே தெரியவில்லை. நிறைய ஸ்கூட்டர்கள், சைக்கிள்கள், கார்கள் என ஏக நெரிசல். இலேசாகத் தூறியதால் குடைபிடித்தும், மழைக்கோட்டு அணிந்தும் ஒரே இலட்சியத்துடன் கடற்கரை நோக்கி விரைந்து கொண்டிருந்தனர். வீழ்ந்திருந்த மரங்களைப் பார்த்து அதன் விபரீதம் புரியாமல் குழந்தைகள் போலக் கெக்கலித்தனர்.

கடற்கரைச் சாலையை அணுகியபோது, "என்னவோ... எங்களைத் திட்டினீங்களே? எவ்வளவு பேரு வேடிக்கைப் பார்க்கறாங்க?" விலாவில் இடித்தான் துணைவி. ஆட்டோவில் இருந்து ஆர்வத்துடன் இறங்கினர் குழந்தைகள்.

அலைகள் மூன்று அடுக்கு மாடி உயரத்துக்கு எழுவதை 'வாவ்!' என ஆர்ப்பரிக்கும் குரல்கள். அலைத் திவலைகள் தடுப்புச் சுவரைத் தாண்டி நடு வீதியில் சாரலாய் வீழ்வதைக் கைதட்டி ரசிக்கும் உல்லாசம்.

இந்தக் கூட்டத்தை நெறி செய்யக் காவலர் ஆங்காங்கே!

"புயலடிக்குதே... வீட்டிலே இருப்போம்னு இல்லாம.... நம்மப் பாண்டிச்சேரி மக்களுக்கு இது ஒரு வேடிக்கை! பாருங்க... சார்! அந்தக் கிழவர் சின்னப் புள்ளையாட்டம் குதிக்கிறாரு! இவங்களைக் கட்டுப்படுத்த நாங்க இப்படி நிக்க வேண்டி இருக்குது!"

நான் மற்றவர்களைப் போலத் துள்ளாமல் நின்றது அவரைக் கவர்ந்ததோ? அந்தப் போலீஸ்காரர் புலம்பினார்.

"நல்லாச் சொன்னீங்க!" நான் மன உளைச்சலை வெளியிட்டேன்.

"அதோ பாருங்க... சார்! இதிலே ஒருத்தன் காசு பண்றான்!" அவர் காட்டியத் திசையில் ஒரு பலூன் விற்பவர் இருந்தார். கையில் இறுகப் பிடித்துக் கொண்டு பலூன் தட்டியில் இருந்து குழந்தைகளின் ஆசைகளைக் காசாக்கிக் கொண்டிருந்தார்.

"அப்பா! எனக்கும் பலூன்பா!" மனோ அழுதான்.

பலூன்காரரை நெருங்கினேன். மனோவின் ஆசை ஒன்றோடு நிற்கவில்லை. குரங்கு பலூனையும், ஆப்பிள் பலூனையும் வாங்கியும் ஜாங்கிரி பலூன் கேட்டு அழுதான்.

"நல்லாப் பணம் பண்ணக் கத்திருக்கே!" எரிச்சலோடு பணம் கொடுத்தேன்.

"சார்... ஒரு நிமிஷம்!" என்று அவன் என்னிடம் ஏதோ சொல்ல முயன்றபோது, காற்றின் வேகத்தில் சில பலூன்கள் தட்டியில் இருந்து பிய்த்து பறந்தன. குழந்தைகள் சில அவற்றைத் துரத்தின.

"இந்தக் காற்றிலே நான் வெளியே வந்தது, ஒங்க குழந்தைகளை மாதிரி வேடிக்கை பார்க்க முடியாத என் புள்ளைங்களுக்காக! மத்த நாளுன்னா... அதுங்கப் பள்ளிக்கூடம் போகும்! அங்கே மதிய சோறு கெடைக்கும்! ஆனா இன்னைக்கு லீவு! அதோட வெயில் காய்ஞ்சா வௌையாடப் போவும்! இந்த நேரத்திலே வீடே கதியாய்க் கெடக்கும்! அப்பப் பசின்னு அழற அதுங்களை சரி செய்யணுமே! அதுக்காகத்தான் இப்படி வீசற காத்திலேயும் வெளியே வர்றேன்!"

கண்கலங்கச் சொன்னவனை மரியாதையுடன் பார்த்தேன். அவனுள் இருந்த தகப்பனை மனமார வணங்கினேன்.

"ஜானகி! ஒனக்கும் பலூன் வேணுமா?" வலுக்கட்டாயமாக மேலும் இரண்டு பலூன்கள் வாங்கினேன்.

---

**''என் கணவர் உடம்புக்கு ஏதாவதுனா நான் சோர்ந்து போய்டுவேன்.''**

**''ஏன்...?''**

**''வீட்டுல எல்லா வேலையையும் நான்தானே செய்யணும்.''**

**– வி. சாரதி டேச்சு**



ஸ்ரீ குருப்யோ நம :





# ரஜத
# பிரதர்ஷிணி



**வெள்ளி வரலாற்றில் முதன் முறையாக** அன்றாட ஆலய, வீட்டு வழிபாட்டிற்குத் தேவைப்படும் வெள்ளியினாலான பூஜைப் பொருட்கள், பாத்திரங்கள், தீப ஆரத்தி வகைகள் மற்றும் தங்கம், வெள்ளி நகைகள் **கண்காட்சி**

துவக்கி வைப்பவர் :

**காஞ்சி காமகோடி பீடம்**

## ஸ்ரீ ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

## ஸ்ரீஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்

பங்கேற்பார்கள்.

---

நாள் : 7–1–2001 பகல் 12.00 மணி

இடம் : **சுக்ரா** *ஜூவல்லரி*

42, வடக்கு மாட வீதி, மைலாப்பூர், சென்னை – 4.

போன் : 4940699, 4610193 பேக்ஸ் : 91–44–4935232

Website : http://www.sukra.com e-mail : sukra@md3.vsnl.net.in

**கண்காட்சி நாள் : ஜனவரி 7, 8, 9**

# ஸ்ரீராமபக்த ஹனுமான்

**கல்யாணபுரம் ஆராவமுதன்**

**ஹ**னுமானைப் பார்த்து ஒரு வசனம் பேசப்பட்டது : "வீரனே! வலிமை என்பது உன்னிடம்தான் இருக்கிறது. உன் கரத்தி லுள்ள வலிமையன்றோ நிஜ வலிமை. உன்னை நோக்க, பிற வீரர்கள் வெறும் ஆவியே அல்லவா? ஏழுலகங்களையும் வென்றவனானாய் நீ. எப்படி என்றா கேட் கிறாய்... பிரும்மதேவனே வந்து நீ நலிவாய் என்று சொன்னாலும் சலிப்பு என்பதே அறி யாத நான் கூட உன் கரங்களால்தானே வீழ்ந்தேன்; மெலிந்தேன்!"

– இதைப் பேசியவர் யார் என்று நினைக்கிறீர்கள்...? சாக்ஷாத் ராவணேச்வரன்! விரோதியின் வாயால் இந்த வாழ்த்தைப் பெறுகிறவண்ணம் ஹனுமான் என்ன செய்தான் என்று கேட்கிறீர்களா...?

ராம – ராவண யுத்தம் நடக்கிறது.... அந்தச் சமயத்தில் வாயு குமாரன் இலங்கேசுவரனை நேருக்கு நேர் சந்தித் துச் சமர்புரிகிறான்.

ராவணன் போர்க்களம் நுழைந்ததுமே முதல் நபராக அவனுடன் போர் புரியத் தயாராய் நின்றவன் ஹனுமான்தான்.

வந்த அரக்கன் ஹனுமானின் மார்பிலே ஓர் அடி அடித்தான் பாருங்கள்.... மற்றொரு வராயிருந்திருந்தால் அந்த இடத்திலேயே பிராணனை விட்டிருப்பார்கள். ஆனால் ஹனுமானுக்கு அந்த அடி தூசி விழுந்த மாதிரி கூட இல்லை! ராவணனை நோக்கி ஒரு குத்து விடுகிறான்.

அவ்வளவுதான்! ராவணனின் பத்து தலைகளும் ஒருசேர சுற்ற ஆரம்பித்து விட்டன!

இந்த நிகழ்ச்சியை கம்பர் ஐந்து பாடல்களில் விவரிக்கிறார். அதில் ஒரு பாடலைப் பாருங்கள் :

கைக்குத்தது படலுங் கழனிருத்ர க்கிறை கறை நீர்
மைக்குப்பையிலெழில் கொண்டொளிர் வயிரத் தட மார்பில்
திக்கிற்சின மதயானைகள் வயவெம்பனை செருவிற்
புக்கின்றன போகாதன புறமுக்கன புகழின்.

**ஹ**னுமானுடைய கைக் குத்து பட்டவுடனேயே,

---

### ஸ்ரீவில்லிபுத்தூர் ஆஞ்சனேயர்

**தி**ருப்பாவை பாடிய ஆண்டாள் அவதரித்த திருத்தலம் ஸ்ரீவில்லிபுத்தூர் என்பது எல்லோருக் கும் தெரியும். ''நாச்சியார் திருமாளிகை'' என்றும் பெயர் பெற்ற இந்தத் தலத்தின் திருக்கோவில் கோபுரம்தான் தமிழக அரசின் சின்னமாகத் திகழ்கிறது.

இங்குள்ள ஆண்டாள் திருக்கோவிலுக்குள் நுழைந்து துவஜஸ்தம்பத்தையடைந்தால் வலது புறம் கண்ணாடியறை. இடதுபுறத்தில் நம்மைக் கவர்ந்து நிற்பவர் பக்த ஆஞ்சனேயர். வெற்றிலை மாலை, வடை மாலை இப்படிப் பலவித பிரார்த்த னைகளைச் செய்து இவரை வழிபடும் பக்தர் களின் கவலைகளைப் போக்கி அருள்பாலிக்கும் ஆஞ்சனேயர் இவர்.

வீரக்கழலணிந்த அரக்கர் தலைவனான ராவணனின் வஜ்ரம் போன்ற உறுதியான விசாலமான மார்பில், திக்குகளெட்டிலு மிருந்து யானைகள் ஓடிவந்து மோதியது போலிருந்ததாம்! அவ்வாறு முட்டி மோதிய யானைகளின் தந்தங்கள் உடைந்து அவன் மார்பிலேயே தங்கியது போலவும், வேறு சில தந்தங்கள் அவனது புகழைப் போலவே அவன் முதுகின் வழியே வெளியேறி விட்டது போலவும் உணர்ந்தானாம்!

இப்பேர்ப்பட்ட அடியை வாங்கிக் கொண்டதும்தான் ராவணன் தன்னை மறந்து ஹனுமானின் வீரத்தைப் புகழ்கிறான்! இத்தனைக்கும், ராவணனைச் சந்தித்து அடிப்பதற்கு முன், வரிசையாய் இலங்கை வீரர்களை விதவிதமாகப் பதம் பார்த்தவன் இந்த ஹனுமான்.

ராவணனுடன் போர் தொடங்கும் முன் மீண்டும் ஒருமுறை தூதனுப்பிப் பார்க்கிறான் கருணாமூர்த்தியான ஸ்ரீராமன். யுத்தம் நடந்தால் உயிர்கள் மடியுமே என்கிற ஆதங்கம் அவனுக்கு!

இம்முறை ராவணனிடம் தூது செல்பவன் ஹனுமான் அல்ல; சுக்ரீவன் மகன் அங்கதன். தூது லக்ஷணங்களின் திருவுருவமாக ஆஞ்சனேயன் இருக்க, வேறொருவரை ஸ்ரீராமன் நினைக்கவும் வேண்டுமா? என்று நமக்குச் சந்தேகம் வரும். ஆனால் அங்கதனுக்கும் ஒரு வாய்ப்புத் தர நினைத்



தான் ராமன். மேலும், ஹனுமானுக்கு யுத்த களத்தில் மலைபோல் பணிகள் காத்திருந்தன. ஒவ்வொன்றும் அவன் ஆற்றலை, சக்தியை நிருபிக்கும் பணி.

சுவேல மலை மீது இருந்தபடி அங்கதனைத் தூது அனுப்புகிறான் ராமன்.

அங்கதனைக் கண்ட இலங்கைவாசிகள் ஹனுமான்தான் மறுபடி வருவதாக நினைத்துக் கொண்டு நடுங்க ஆரம்பித்து விட்டார்களாம்! அப்படியொரு அமர்க்களம் செய்துவிட்டுப் போயிருக்கிறான் ஹனுமான் அங்கே.

*அழுகின்ற கண்ண ராகி*
*அனுமான்கொல் என்ன அஞ்சித்*
*தொழுகின்ற சுற்றஞ்சுற்ற*

என்கிறார் கம்பர். அதாவது, அங்கதனை ஹனுமான் என்று எண்ணி கண்ணீர்ப் பெருக்கி, நடுங்கி, தொழுது நிற்கிறார்களாம்!

ஆனால் ராவணேசுவரன் பயப்படவில்லை. அங்கதன் தூது பலிக்காமல் போயிற்று. போர் அறிவிப்புச் செய்கிறான் இலங்கை மன்னன். வானர சைனியமும் அரக்கர் படையும் மோதுகின்றன!

ராம - லக்ஷ்மணர்கள் வரையில் அசுரர்களை வரவிடாமல் வானரங்கள் கையில் கிடைத்த மரம், மலைப் பாறை என்று சகலத்தையும் எடுத்து அசுரர்களை அடித்து, நொறுக்கிக் கொன்று குவிக்கின்றன.

இந்திரஜித் வருகிறான். ராம - லக்ஷ்மணர்களை நாக பாசத்தால் கட்டிப் போடுகிறான். அவர்கள் மயக்கமுற்றது கண்டு மாண்டே போய்விட்டதாக நினைத்து ஓடிப் போய் ராவணனிடம் சொல்லி மகிழ்கிறான். ஆனால் கருடனின் வரவால் நாக பாசத்திலிருந்து விடுபட்டு ராம - லக்ஷ்மணர்கள் விழித்தெழுகிறார்கள். யுத்தத்தைத் தொடங்குகிறார்கள்.

'இவர்கள் எப்படிப் பிழைத்தார்கள்?' என்று புரியாத ராவணன், ஆத்திரத்துடன் தூம்ராக்ஷன் என்ற ராக்ஷஸனை அனுப்புகிறான். மிகுந்த பலசாலியான அவன் வானரர்களை வீழ்த்துவதைக் கண்டு ஹனுமானுக்கு பீறிட்டுக் கொண்டு கோபம் வருகிறது. தூம்ராக்ஷனின் ரதம், சாரதி, குதிரை எல்லாம் பொடிப் பொடியாய்ப் போகும்படி ஒரு காரியம் செய்தான் ஹனுமான். ஒரு மலையையே பெயர்த்து எடுத்து வீசினான்!

சலியாத தூம்ராக்ஷன் கூர்மையான ஆணிகள் பொருந்திய கதாயுதத்தை வீச, அதை ஹனுமான் வெகு சாமர்த்தியமாகத் தடுத்து, மற்றொரு மலைச் சிகரத்தை உடைத்தெடுத்து தூம்ராக்ஷன் மேல் வீசி அவனைக் கொன்றான்!

தூம்ராக்ஷன் மாண்டானே என்கிற கோபத்தில் ராவணன் வஜ்ரதம்ஷ்டிரன் என்பவனை அனுப்ப, அவன் அங்கதனின் ஆயுதங்களுக்கு விருந்தானான்!

அதன் பிறகுதான் ராவணன் அகம்பனன் என்பவனை அனுப்பினான். மிகப் பெரிய சேனையுடன் வருகிறான் அகம்பனன். எப்படிப்பட்ட மகாயுத்தத்திலும் அழிக்கப்பட முடியாதவன் என்பதால்தான் அவனுக்கு அகம்பனன் என்றே பெயர். அகம்பனனைக் கண்ட பிற வானரர்கள் பயந்து ஓட ஆரம்பித்தனராம். எதிர்கொண்டு நின்றவன் ஹனுமான்தான்!

கோபம் கொதிக்க பதினான்கு பாணங்களை ஹனுமான் மீது ஏவுகிறான் அகம்பனன். அந்தப் பாணங்களிலிருந்து விடுபட்டதுமல்லாமல் ஒரு பெரிய மரத்தை வேரோடு பிடுங்கி அகம்பனின் தலையிலடிக்கிறான் ஹனுமான். அதோடு அகம்பனன் கதை முடிந்தது. அரக்கர்கள் பயந்து ஓடுகிறார்கள் ராவணனிடம் சொல்ல.

ஹனுமானோ, மது - கைடபர்களை வென்று நின்ற மஹாவிஷ்ணுவைப் போல வீரமும் தேஜஸும் மின்ன நிற்கிறான் வானர சேனைகளின் நடுவே.

இதன் பிறகு பிரகஸ்தன் முதலான ராக்ஷஸ வீரர்கள் போருக்கு வந்து வரிசையாய் மாண்டு போகிறார்கள்.

இதைப் பார்த்துவிட்டுத்தான் ராவணன் தானே நேரே வருகிறான். வந்து ஹனுமானிடத்தில் அடி வாங்கி நின்று, அவனை மெச்சிப் புகழ்கிறான்!

**ரா**வணன் வாயால் புகழப்பெற்ற வீரம் ஹனுமானுக்கு எப்படி வாய்த்தது என்கிறீர்கள்...? வாயு புத்திரன் - அவன் பிறவியிலேயே பராக்கிரமம் படைத்தவன். தேவர்

## அருள்வாக்கு

**நா**மாகவே தெரிந்து கொள்வதை விட, அதாவது புஸ்தகம் படித்தும் ஸ்வய அநுபவங்களாலும் மட்டும் தெரிந்து கொள்வதை விட குருமுகமாகத் தெரிந்து கொள்வதில் என்ன சிறப்பு என்றால், நாமாகத் தெரிந்து கொள்ளும் போது, 'இவ்வளவு படித்தோம், இப்பேர்ப்பட்ட விஷயங்களை நம்முடைய அநுபவத்தாலேயே தெரிந்து கொண்டோம்' என்ற அஹங்காரம் ஏற்பட இடமிருக்கிறது. புஸ்தகப் படிப்பும் வேண்டியதுதான். குருவே புஸ்தகத்திலிருந்தும் உபதேசிக்கிறார். குரு உபதேசமெல்லாமும் ஸ்வாநுபூதியில் கொண்டு விடுவதற்குத் தானே? ஆனால் அப்படி ஒரு பெரியவரின்

துணை, Guidance இல்லாமல் நாமாகப் படிப்பு, அநுபவம் என்று போகும்போது, (தலையைத் தொட்டுக் காட்டி) கனத்துப் போகிற அபாயம் இருக்கிறது. குரு என்று ஒரு பெரியவரை வரித்து விட்டால் அவரிடம் அடங்கியிருப்பது, சுச்ரூஷை செய்வது என்று இருப்பதில் ஆத்மாவுக்கு மிகவும் ஹானிகரமான இந்த அஹங்காரம் அப்படியே நசிக்க வசதி ஏற்படுகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக புஸ்தகத்தில் சொல்லியிருக்கிறதும், மூளை லெவலில் மட்டும் புரிகிறதுமான தத்வங்கள், ஒரு அநுபவியின் மூலம் அவருடைய நிறைந்த அநுக்ரஹ



சிந்தையோடு உபதேசமாக வரும்போது ஜீவனுள்ள சக்தியாக நமக்குள் போய் நம்மையும் ஸத்ய அநுபவத்துக்கு அழைத்துக்கொண்டு போகிறது. அந்தப் பெரிய அநுபவம் தனக்கு ஏற்படுவதிலும் சிஷ்யன் அஹங்காரப்பட முடியாது. ஏனென்றால் அஹங்காரம் நாசமாகி ஆத்மா மாத்திரம் பிரகாசிப்பதுதான் அந்த அநுபவமே! அதற்கு குருவின் அநுக்ரஹம் ரொம்ப அவச்யம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

களின் கண்மணி, பிரும்மனின் அருளாசி பெற்றவன். இதற்கெல்லாம் மேலான பலம் அவனுடைய ராம பக்திதானே! அதோடு நீ ராமனின் புஜங்களால் ஆலிங்கனம் செய்யப்பட்டு புளகாங்கிதமடைந்த தோள்கள் அவனுடையவை. அந்தத் தோள்களிலும் அந்த நிர்மலமான மனத்திலும் வீரம் கொப்பளித்து எழக் கேட்பானேன். ராவணன் என்ன... யுகயுகத்து அசுரர்களெல்லாம் திரண்டு வந்து நின்றாலும் தோற்றுப் பணிந்து வாழ்த்திச் செல்லக்கூடிய வீரன் ஸ்ரீ ராம பக்த ஹனுமான்.

அதனால்தான் அருணாசலக் கவிராயர் ராவண – ஆஞ்சனேய யுத்தத்தை வர்ணிக்கும் போது, ஹனுமானே ராவணனுக்குச் சவால் விட்டதாகப் பாடுகிறார் :

*குத்துக்கு வாடா ராவணா, கைக்குத்துக்கு வாடா!*
*பத்துத் தலையும் இருபது கையும் ராக்ஷஸ*
*பலமும் குரங்கின் பலமும் தெரிய வேணும்*

'பத்துத் தலை, இருபது கையுள்ள அரக்கனான நீ பலம் பொருந்தியவனா அல்லது குரங்கான நான் பலவானா என்று பார்த்து விடலாம் வா!' என்கிறானாம் ஹனுமான்!

ஆலிங்கன கோலத்திலே சென்ற வாரம் விட்டுப் பிரிந்தோமல்லவா ஸ்ரீராமனையும் அவன் முதல் பக்தனையும். அந்த ஆலிங்கன மகிமையைச் சொல்லவே ஆஞ்சனேயனின் தோள் வலிமைக்கும் மனவலிமைக்கும் சாட்சியான இந்தச் சம்பவத்தைச் சொன்னேன்.

இலங்கைக்குப் புறப்படும் முன், யுத்தத்துக்கு எப்படியெல்லாம் தயாராக வேண்டும் என்பதையும் ஆஞ்சனேயன்தான் ஸ்ரீராமனுக்குச் சொல்கிறான்.

"ஸ்ரீ ராமா! இலங்கையிலே உள்ள ஜனங்கள் எப்போதுமே மகிழ்ச்சியில் திளைத்தபடியிருப்பார்கள். மதம் பிடித்த யானைகளும் ஏராளமான ராக்ஷஸர்களும் நிரம்பியுள்ள இலங்கைக்குள் எவரும் எளிதில் புக முடியாது. இலங்கையிலே மிக விசாலமான நான்கு வாசல்கள் உள்ளன. வாசலுக்கான கதவுகள் மிக உறுதியானவை. அவற்றில் இரும்புப் பூட்டுகள் பூட்டப்பட்டுத் தொங்கிக் கொண்டிருக்கும். மீறி உள்ளே செல்வது கஷ்டம். யந்திரங்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன அந்த வாயில்களில். எதிரிகள் வரும்போது அவற்றைக் கொண்டு, பிரும்மாண்டமான கற்களையும் பாணங்களையும் வீசி வீழ்த்துவதற்காக ஏற்பட்டவை அவை. இவை தவிர, நூற்றுக்கணக்கான ராக்ஷஸர்கள் இரும்புத் தடிகளைக் கையில் ஏந்திக் காவல் நிற்கின்றனர். எவரும் எளிதில் ஏறிக் கடக்க முடியாத மதில் சுவர் இருக்கிறது. அகழி ஆழமானது. முதலைகள் அதிலே வாய் பிளந்து காத்திருக்கின்றன. கிழக்கு வாயிலில் பதினாயிரம் ராக்ஷஸர்கள், மேற்கு வாசலில் பத்து லட்சம் ராக்ஷஸர்கள், வடக்கு வாசலில் நூறு கோடி அரக்கர்கள்... கத்தி, சூலம், ஈட்டி, உலக்கை என்று விதவிதமான ஆயுதங்களுடன் காவல் புரிகிறார்கள்.

"அகழிகள், மதிலைக் கடந்து இலங்கையைக் கொளுத்தி விட்டேன் நான். அதனால் இப்போது உள்ளே நுழைவது அவ்வளவு சிரமமாயிராது. ஆனால் இலங்கையை அடைய சமுத்திரத்தைக் கடக்க வேண்டும் என்றான்..."

எத்தனை துல்லியமாக, 'மேப்' வரைந்த மாதிரி இலங்கையை மனப்படம் பிடித்து வந்து ஸ்ரீராமன் முன் விரித்துக் காட்டுகிறான் ஹனுமான்!

(வளரும்)

# லட்சுமி செய்த

மூன்றாவது வகுப்பு வரை படித்த பரிசுத்தமான கிராமத்து வாசனை கொண்ட, கொஞ்சம் நெருங்கிய உறவுடைய லட்சுமி, மிலிட்டரியில் வேலை செய்யும் எனக்கு 1973ல் மனைவியாக அமைந்தாள்.

திருமணமான புதிதில் பல் பொடி, அல்லது சாம்பல் கொண்டு அவள் பல் தேய்த்துக் கொண்டிருந்ததைப் பார்த்து அன்பாகக் கண்டித்தேன். "பேஸ்ட் வச்சு பல் தேய்ச்சா நல்லது; 'எனாமல்' கெடாமல் இருக்கும்" என்று சொல்லி விட்டு புதிய பிரஷ்ஷும், பேஸ்ட்டும் வாங்கிக் கொடுத்தேன். மறுநாள் காலை சாப்பிட உட்காரும் போது கேட்டாள் என் ஆசை மனைவி.

"ஏங்க, நீங்க பல் தேய்க்கும் போது மட்டும் ஏகப்பட்ட நுரை வருது. நான் தேய்க்கும் போது வரவே மாட்டேங்குதே ஏன்?"

"பேஸ்ட்டை அதிகமா போட்டியா?"

"ரெண்டு தடவை போட்டுத் தேய்த்தும் ம்ஹூம்... நுரையே வரலைங்க" என்றாள்.

நான் தலையைச் சொறிந்து கொண்டு பாத்ரூம் ஷெல்ஃபில் கவனித்தால் ஷாக்!

முகச்சவரம் செய்து விட்டு 'கிட்' பாக்ஸில் நான் வைக்காமல் போன இரண்டு டியூப் ஷேவிங் கிரீம் காணாமல் போயிருந்தது!

**கல்கி – ரமணி Vs ரமணி இணைந்து நடத்திய 'தம்பதி தமாஷ்' போட்டியில் ரூ. 2000 மதிப்புள்ள பட்டுப் புடைவையை ஆறுதல் பரிசாகப் பெறும் கட்டுரை.**

ஒருமுறை புதிதாகத் திருமணமான எனது நண்பரை விருந்துக்கு அழைத்திருந்தேன். "அவர்களுக்கேத்த மாதிரி எனக்கு சமைக்கத் தெரியாது; யாராவது ஒரு சமையல்காரரை ஏற்பாடு பண்ணிடுங்க" என்றாள் என் மனைவி. எனக்கும் சரியென்று பட்டது. ஒரு பாட்டியை ஏற்பாடு செய்தேன். நான் கொடுத்திருந்த இரண்டு கிலோ 'மட்டனை' சமைத்து விட்டு சென்று விட்டார். நண்பரும் மனைவியும் சாப்பிட உட்கார்ந்தார்கள். அவர்கள் சாப்பிடும் போது நான் இருந்தால் புதுப்பெண் கூச்சப்படுவார் என்று நினைத்து வெளியில் வந்து நின்றேன். என் மனைவி பரிமாறினாள். சாப்பிட்டு முடித்து வெற்றிலை போட்டார்கள். மூவர் முகத்திலும் ஏதோ ஒரு கவலை ரேகை எனக்கு ஒரு மாதிரி ஆகிவிட்டது. நண்பர் சென்ற பிறகு மனைவியிடம் கேட்கலாமென்று இருந்து விட்டேன். சொந்தக்கதை, அந்தக் கதை, இந்தக் கதை பேசி நண்பரை அனுப்பி வைத்தேன். மனைவி சொன்னாள் : "என்னங்க இது, நானும் குழம்பு சட்டியில அகப்பையை வச்சு தேடித் தேடிப் பார்க்கிறேன்... வெறும் எலும்புத் துண்டாத்தான் வருது; கறியவே காணும்ங்க; ச்சே அவங்க ஏதும் நினைச்சுடக்கூடாதே" என்றாள் கவலையுடன்.

'அதெப்படி?' என்று நானும் அடுப்பங்கரையில் துழாவினேன். சோற்றுப் பானை அருகில் ஒரு 'ஹாட் பாக்ஸ்' இருந்தது. திறந்தால்... மட்டன் கறி! சமையல்காரப் பாட்டி, கறியை மட்டும் தனியாக எடுத்து வறுவல் செய்து வைத்திருக்கிறாள்! என் மனைவி என்னைப் பார்க்க, நான் அவளைப் பார்க்க, கோபப்படுவதா, பரிதாபப்படுவதா தெரியவில்லை.

"ஐயோ, ப்ளாஸ்டிக் டப்பால போயி எந்த மடச்சியாவது கறியை வைப்பாளா? ப்ளாஸ்டிக் வாசனை வராதா? எங்க ஊர்ல எல்லாம் இப்படி இல்லீங்க. எலும்பையும் கறியையும் குழம்பாத்தான் செய்வோங்க" என்றாள்.

அவளின் அறியாத்தனத்தை நினைத்து சிரித்து விட்டு ஹாட் பாக்ஸை எடுத்துக் கொண்டு மூன்று தெரு தள்ளியிருக்கும் நண்பனின் வீட்டில் நிலைமையைச் சொல்லி

'ராத்திரி சாப்டுக்குங்க' என்று சொல்லி, கொடுத்து விட்டு வந்தேன்!

# தந்தூரி ரொட்டி!

ஒருநாள் மனைவியிடம், 'தந்தூரி' ரொட்டி பற்றி விளக்கிக் கொண்டிருந்தேன். "சாப்பிட்டு ரொம்ப நாளாச்சு" என்றும் சொல்லியிருந்தேன். என் விடுப்பு முடிய ஒரு நாள் இருக்கும்போது, ஊருக்குப் போவது பற்றி பக்கத்து ஊரிலிருக்கும் அம்மாவிடம் சொல்லி விட்டு வர கிளம்பி விட்டேன். திரும்பி வரும் போது, வாசலில் சின்னக் கூட்டம். என் மனைவி அழுது கொண்டிருந்தாள். என்னைப் பார்த்ததும் அழுகை அதிகமாகியது. விசாரித்தேன்.



அடுத்த லீவு வரும் வரை நான் அவளையே நினைத்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதற்காக மண்ணெண்ணெய் ஸ்டவ்வில் 'தந்தூரி' ரொட்டித் தயாரிக்க முயன்றிருக்கிறாள். கோதுமை மாவை வட்டமாகத் தட்டி குச்சியில் வைத்து அடுப்பில் காட்ட, குச்சியில் தீ 'கபக்'கெனப் பிடிக்க, ரொட்டி அடுப்பில் விழ, தீ அணைய, மண்ணெண்ணெய் கொப்பளித்துப் பெருக, திரும்பவும் பற்றவைக்கும்போது குப்பென்று ஸ்டவ் முழுவதும் எரிந்து... கையைச் சுட்டுக் கொண்டு அலறியவளை, பக்கத்து வீட்டு அக்கா ஓடிவந்து தீயை அணைத்துக் காப்பாற்றியிருக்கிறாள்!

"ஏம்பா, தந்தூரி ரொட்டி வேணும்னா கடையில போய்ச் சாப்பிட வேண்டியதுதானே... இப்படியா ஒண்ணுந்தெரியாதவளை செய்யச் சொல்லிக் கேக்கறது?" என்று பக்கத்து வீட்டுக்காரர்களின் வசவு வேறு!

"நீ தந்தூரி ரொட்டி பண்றேன்னு என்னைத் தூக்குல (வரதட்சணை கேஸ்) ஆட விடத் தெரிஞ்சியே" என்று நான் கேட்க, அவள் முழிப்பதைப் பார்த்து என் மேல் வைத்திருக்கும் அன்பை நினைத்து நெகிழ்வதா? அல்லது அவள் இயலாமையை நினைத்து சிரிப்பதா, என்று புரியவில்லை.

— ஞானபாஸ்

● சி. ஈஸ்வரமூர்த்தி, சென்னை - 92.

*? ஓட்டுனர் உரிமம் வழங்குவதில் மற்ற நாடுகளைப் போல சட்டங்களைக் கடுமையாக்கி மாமூல் வழங்குகிற நிலையை மாற்ற வழியில்லையா?*

! வழியிருக்கிறது. அதில் செல்லும் முடிவை அரசு எடுக்க வேண்டும். பெரும்பாலான விபத்துகளுக்கு ஓட்டுனர்களின் அலட்சியமே காரணம் என்று ஆய்வுகள் கூறுகின்றன. அதிலும் அரசு வாகன ஓட்டுனர்களே அதிகமாம். உயிர்ப் பலிக்குக் காரணமானவர்கள் கூட ஜாமீனில் உடனே வெளிவந்து விடுகிறார்களாம்.

● கே. ராஜேந்திரன், மருதாடு.

*? அ.தி.மு.க.வில் ஊழல் செய்தவர்கள் ஆறு, ஏழு பேர் ஒவ்வொரு வழக்கிலும் இருந்தும் புனைந்த வழக்கு என்கிறார்களே...?*

! பின்னே என்னய்யா, வழக்குகள் மேல் முறையீட்டில் இருக்கும்போது குற்றத்தை ஒப்புக்கொண்டு தண்டனையை உறுதிப்படுத்தவா முடியும்?

● எஸ். சங்கரன், சென்னை - 61

*? திராவிடர் கழகம், துவக்கத்திலிருந்தே சமூக சீர்திருத்தம், பகுத்தறிவு என்ற பெயரால் இந்திய கலாசாரத்தையும் ஹிந்து மத தத்துவங்களையும் இழிவு படுத்துவதையே முக்கிய இலட்சியமாகக் கொண்டிருக்கிறது. தந்தை பெரியார் கூட இந்த அளவுக்குப் பிரசாரம் பண்ணவில்லையே...?*

! இரணிய கசிபுகள் இருந்தால்தான் பிரஹலாதர்கள் தோன்றுவார்கள். தொடரட்டும் அவர்கள் பிரசாரம். தடை விதிக்க முயன்றால்தான் அவர்களுக்கு முக்கியத்துவம் வளரும்.

● பி.பிரகாஷ், மதுரை - 16.

*? காங்கிரஸ் கொண்டு வந்த தீர்மானத்துக்கு எதிராக அளிக்கப்பட்ட வாக்குகள் ராமர் ஆலயம் கட்டுவதற்கு ஆதரவானவை என்று பா.ஜ.க தலைவர் கூறுவது தவறு தானே?*

! போனால் போகிறது என்று ஆதரவு கட்சிகள் பிச்சை போட்டால் அதை போனஸ் என்று சொல்லிக் கொள்வதா? ராஜ்யசபா வாக்குகளை ஏற்று கோயில் கட்டும் திட்டத்தைக் கைவிடுவார்களா...!

● க.நா. இராஜேஸ்வரன்,

மொரட்டுப்பாளையம்

*? நியாய விலை கடைகளில் மண்ணெண்ணெய் விலையை ஒரு லிட்டருக்கு அறுபது பைசா குறைக்க தமிழக அரசு முடிவு செய்துள்ளது தேர்தலை மனத்தில் வைத்துத் தானே...?*

! மத்திய அரசு ஏகமாக உயர்த்திய விலையைக் கொஞ்சம் குறைத்தது. இப்போது ஏழை-பாழைகளுக்கு உதவும் பொருட்டு மேலும் குறைத்துள்ளது தி.மு.க அரசு. அதைப் போய்த் தேர்தல் கால சலுகை என்று முத்திரை குத்தி... என்னங்க நீங்க! 'ஜெ'க்குக் கற்றுக் கொடுப்பீங்க போலிருக்கே!

## அதிமுக ஆட்சி உறுதி என்கிறாரே ஜெ...?

● ஆ. அழகேஷ், பூதப்பாண்டி.

*? தொலைக்காட்சியில் பேட்டி கொடுப்பவர்களாகட்டும், பேட்டி எடுப்பவர்களாகட்டும், ஆங்கில வார்த்தைகளை அதிகம் பயன்படுத்துகின்றனரே... ஆங்கிலம் தெரியுமென்று காண்பிக்கவா? அல்லது தமிழ் மறந்துவிட்டதா?*

! எல்லாம் சுமி சூப்பர் மார்க்கெட்டைப் படித்ததன் பாதிப்புதான்! ஃபாஷன் எவ்வளவு வேகமாகப் பரவுகிறது பாருங்கள்!

• 'அன்புடன்' அழைப்பு!



...ாக்குதல் திலகம்!



'மொழி'யாதது...!



பெருந்தன்மை...!



•.... பிரகடனம்!

☐ ரூ. 50 பரிசு பெறுபவர்:
கணபதி வெங்கட்ராமன்
131/11, சீனிவாசபுரம்,
பட்டினப்பாக்கம்,
சென்னை 600 028

* ரூ 25 பரிசு
பெறுபவர்:
எஸ். சங்கரன்,
பழைய எண் 10,
29வது குறுக்குத்
தெரு, நங்கநல்லூர்,
சென்னை 600 061.

● வி. சிவா,
மதுரை-10.

? தமிழக சுற்றுலா வளர்ச்சிக் கழகமும் மூடுவிழா காணப் போவதாக வந்துள்ள செய்தி பற்றி...?

! பல கோடிகள் நஷ்டத்துக்கு சுப மங்களம்! சுற்றுலா தழைக்கச் செய்ய தனியார் துறைக்கு ஏராளமான வாய்ப்புகள் உள்ளன. தேவை - உழைப்பு, திட்டமிடல், போதும் என்ற பொன்மனம்.

● டி.எஸ். பாலு,
சென்னை – 42.

? புதிய இசையமைப்பாளர்களையும் பாடகர்களையும் டி.எம்.எஸ் எப்போதும் தாக்கிக் கொண்டே இருக்கிறாரே ஏன்...?

! ஸ்டேஜ் 1: யார் என்ன பாடினாலும் டி.எம்.எஸ். டிஎம்எஸ்தான்!
ஸ்டேஜ் 2: பிரமாதமான பாடகர்தான்; அதற்காக இப்படியா குறை சொல்லிக் கொண்டிருப்பார் மனுஷர்?
ஸ்டேஜ் 3: இவர் என்ன பாடிக் கிழித்துவிட்டார் என்று எல்லோரையும் தாக்கிக் கொண்டேயிருக்கிறார்?
ஸ்டேஜ் 3க்கு ரசிகர்கள் போய்விடாமல் இருக்க டிஎம்எஸ் குறை கூறுவதை விட்டொழித்து பாஸிடிவாகச் செயல்படுவது நல்லது.

● எம். குணசேகரன்,
வேலாயுதம்பாளையம்.

? 'இந்தி உயிரோட்டமுள்ள மொழி' என பிரதமர் வாஜ்பாய் கூறியிருப்பது பற்றி...?

! நல்லவேளை இந்தி மட்டும்தான் உயிரோட்டமுள்ள மொழி என்று தொடங்கி என்னத்தையாவது சொல்லி பிரச்னையைக் கிளப்பாமலிருந்தாரே... அதுவரைக்கும் க்ஷேமம்!

● கணபதி வெங்கட்ராமன்,
சென்னை - 28 ☐

? பேராசிரியர் அன்பழகனின் பிறந்தநாள் விழாவில் பேசியபோது 'அன்பழகன் எனக்குத் துணையாக இல்லை; இணையாக இருக்கிறார்' என்று கலைஞர் கூறியது அவரது பெருந்தன்மைக்குச் சான்றாக இருக்கிறதல்லவா?

! ஸ்டாலின் புத்தக வெளியீட்டு விழாவில் அடுத்த கட்சித் தலைமை பொறுப்பு ஸ்டாலினுக்கே; தாம் குறுக்கே நிற்கவில்லை என்று பிரகடனப்படுத்திய பேராசிரியருடைய பேச்சை விடவா!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? தி.மு.கவை வீழ்த்த எல்லா கட்சிகளும் அ.தி.மு.க கூட்டணியில் சேர வேண்டுமென்று ஜெயலலிதா பகிரங்க அழைப்பு விடக் காரணம் மக்களுக்கு நல்லாட்சி தர வேண்டும் என்பதுதானே...?

! ஆமாம், அவர் மீதுள்ள வழக்குகளையெல்லாம் பிசுபிசுக்க வைத்துவிட்டால் உடனேயே தமிழகத்தில் நல்லாட்சி தன்னால் மலர்ந்து விடாதா!

● கருப்பம்புலம், சித்திரவேலு, நெய்விளக்கு

? குடும்பக்கட்டுப்பாட்டை தீவிரப்படுத்தியதற்குப் பரிசும் தந்துவிட்டு எம்.பி. சீட்டைக் குறைத்தால் எப்படிங்க...?

! குறைக்கவில்லை; இன்னும் இருபது வருஷத்துக்கு அதிகரிக்க முடியாதபடி 'உறை நிலை'யில் வைக்கப் போகிறார்கள். ஆனால், கு.க.வில் நம் அளவு ஆர்வம் காட்டாத பிற மாநிலங்களில் எம்.பி.க்கள் எண்ணிக்கை அதிகமாயிருக்கும். பார்லிமெண்டில் நம்மைப் போன்ற மாநிலங்களின் குரல் மட்டும் கம்மிப் போகும் என்பதே மாநில அரசின் அச்சமும்கூட!

● பி.காந்தி, மதுரை-16.

? "தான் போட்டியிட்டாலும் போட்டியிடாவிட்டாலும் தமிழகத்தில் அ.தி.மு.க ஆட்சி உறுதி. முதல்வர் யார் என்பதைப் பொறுத்திருந்து பாருங்கள்... " என ஜெ கூறியிருப்பது பற்றி...?

! ஜெயலலிதா முதல்வராக இருப்பதைவிட, முதல்வராக இல்லாமல், அதிகார கேந்திரமாக மட்டுமே இருக்கக்கூடிய ஜெயலலிதா அதிக ஆபத்தானவர். தமிழக மக்களை உஷார் படுத்துகிறோம். அப்புறம் அவர்கள் இஷ்டம்!

— தராசு



# கண்டேன் சீதையை

"ஸர்ரகேட் மதரிங்" என்பது ஒரு "சென்ஸிடிவ் இஷ்யூ." அதை இப்படியா கோணல் மாணலாகக் கையாளுவார்கள்? அதுவும் ஒரு கோணல் ஒரு மாணல் அல்ல, நூறு கோணல் முந்நூறு மாணல்.

புருஷன் உயிரைக் காப்பாற்றுவதற்கு சௌந்தர்யாவிடம் துட்டு லேதண்டி. அதனால் ஒரு குழந்தை இல்லாத தம்பதிக்கு வாடகைத் தாயாக இருக்க ஒப்புக்குன்னாரு. அவர்கள் தரும் பணத்தில் புருஷனைக் காப்பாடுதாரு. மனைவியின் செய்கையை ஜீரணிக்க முடியாமல் விக்ரம் விவாகரத்துக்கு அப்பீல் சேஸ்தாரு. விக்ரமுக்கு விவாகரத்து கிடைக்காமல் பண்ணிவிட்டு கூட்டோடு கூடாக விலகி விடுகிறார் சௌந்தர்யா காரு. இந்ததனே கத.

வாடகைத் தாயாக இருக்கச் சம்மதித்தது விபச்சாரத்துக்குச் சமம் என்று எதிர்க்கட்சி வக்கீல் வாதாட - மெஷினை இயக்க தையற்காரர்கள் 'கால்கள்' என்ற உறுப்பை உபயோகப்படுத்தவில்லையா? கோர்ட்டில் வாதாட வக்கீல்கள் 'தொண்டை' என்ற உறுப்பை பயன்படுத்தவில்லையா? அதே போல் பணம் சம்பாதிக்க நான் 'கர்ப்பப்பை' என்ற உறுப்பை உபயோகப்படுத்தினேன் என்று சௌந்தர்யா எதிர்வாதம் செய்ய - அடா அடா அடா - லாஜிக் பிச்சு உதறுகிறது போங்கள்!



விக்ரம் பிழைத்து எழுந்து வீட்டுக்கு வருவதற்குள் வாடகைத் தாய் சமாசாரம் காட்டுத் தீயாய்ப் பரவி விக்ரமை காலனி வாசிகள் என்னவோ போல் வேடிக்கைப் பார்க்கிற அளவுக்குப் போய் விடுகிறதாம். தெரியாமல்தான் கேட்கிறேன், டீ.வி. நிகழ்ச்சிகளில் முக்கியச் செய்தி 'பை-லைன்' ஆக கீழே ஓடுமே அதே மாதிரி சௌந்தர்யா சம்மதித்த விஷயத்தை எல்லா டீ.வி. சானல்களும் ஃபினாஷ் செய்துவிடுவார்களோ?

அரட்டை அரங்கத்தையும் கோமகவரனையும் கிண்டல் செய்வதாக நினைத்துக்கொண்டு அறுத்துக்கொட்டுகிறார் விவேக். இவருடைய காமெடிக்கு அந்த நிகழ்ச்சிகள் நூறு மடங்கு தேவலாம்!

சௌந்தர்யாவின் முகம் பேசுகிறது. விக்ரமும் குறைச்சல் இல்லை என்றாலும் பாதி படத்துக்கு முகத்தில் பாண்டேஜ். மீதி படத்துக்கு மோவாயில் தாடி... முகம் பேசுவது கண்ணுக்குத் தெரியவில்லை.

சற்றே மறை கழன்ற வில்லன் மட்டும்தான் இந்தப் படத்திற்குக் குறைச்சலாக்கும்?

— கிருஷ்ணா சிதம்பரம்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

# உங்கள் சமையல் சுவையானதாக மட்டுமில்லாமல்



## தரமாகவும் இருக்க

# ஆவின் நெய்




AGMARK SPECIAL GRADE




*Naturally Nutritious*

ஆவின் – தமிழ்நாடு அரசு கூட்டுறவு நிறுவனத்தின் தரமான தயாரிப்பு

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com /
www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka



